# ஸ்ரீராம கானாமிருதம்

(பால காண்டம்)






Published By CHETLUR COMPANY, MYLAPORE, MADRAS 4

அன்பளிப்பு

# ஸ்ரீராம காநாமிருதம்

## (பாலகாண்டம்)

—இசைநூல்—



*

ராமாயண கலாமணி. S. V. ராமஸ்வாமி,
போஸ்ட்டல் சூபர்வைசர்,
திருப்பத்தூர் (வட ஆற்காடு மாவட்டம்).



*

சன்னை விவேகானந்தர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர்
ஸ்ரீ உ. வே. C. ஜெகந்நாதாச்சாரியார் அவர்களால்
[M. A. (Hist), M. A. (Tamil), L. T,, P. O. L., Dipl. Geog., Vidvan]
பரிசோதித்து அமைக்கப்பட்டது.

*

இசையமைப்பு:—
ஸ்ரீமதி விஜயா ராமஸ்வாமியால்
நிறுவப்பட்டு
அண்ணாமலைச் சர்வகலாசாலை ஸங்கீத பூஷணம்
ஸ்ரீமான் S. ராமநாதய்யர் அவர்களால்
பரிசோதிக்கப்பட்டது.

*

சென்னை மயிலாப்பூர் சேட்லூர் கம்பெனி வெளியீடு.

ல் பதிப்பு 1000]  1955  [விலை ரு. 1—8—0

UNIVERSITY OF MADRAS.

TRIPLICANE P. O.,
MADRAS-5,

*Dated. 12th August 1955.*

## FOREWORD.

The Ramayana is a precious item of our cultural heritage. It is the one story which is familiar to all the strata of Society in India. One can hear the story of the Ramayana rendered in simple songs in the various languages of the great country of ours. These songs can be heard in both rural parts and urban parts.

For the first time the story of the Ramayana is being rendered in the form of ballads by the talented author Sri. S. V. Ramaswamy. I have had the opportunity of listening to the rendering of these narrative songs. They are appealing and interesting. They are clothed in simple music. Their easy flowing rythm helps one to enjoy the sahitya in a full measure. These songs can be learnt and sung by large groups of people. The pleasure is greater when one actually sings the songs.

An interesting feature of these songs is that different ragas, inclusive of less common ragas like Abheri, Navarasa Kannada and Saramati have been used. The monotony that is usually felt in listening to ballads has thus been overcome. The notation for the songs has been given at the end. Any musician can learn the songs and teach them to a number of people.

I wish to congratulate the author on publishing this work. Creative work is always praiseworthy. This publication marks a new chapter in the history and evolution of musical forms.

**P. SAMBAMOORTHY,**

*Head of the Department of Indian Music*

*&*

*President, Faculty of Fine Arts, University of Madras.*

# மதிப்புரை

நாடிய பொருள்கை கூடும் ஞானமும் புகழு முண்டாம்
விடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றேள்வலி கூறு வோர்க்கே.

இந்தக் கலிகாலத்தில் நாத்திகத்தன்மை மேலிட்டவராய்ச் சிலர் முன்வந்து தெய்வதூடணை புரிந்து சாதாரண சனங்களின் உள்ளத்தைப் பேதஞ்செய்கின்றனர். அது, நல்லோர் செவியைச்சுட்டு, அவர் மனத்தைப் புண்படுத்துவது கண்கூடு. அதற்கு மாற்றி, கடவுளின் சரிதையை இசைப்பாடலாகப்பாடி நல்லோர் செவிக்கு உணவாகக் கொடுப்பதே என்ற எண்ணத்தை நம்பெருமான் ஸ்ரீமான் ராமாயணகலாமணி S. V. இராமசுவாமி ஐயங்கார் சுவாமிக்குத் (போஸ்டல் சூப்பர்வைசர், திருப்பத்தூர், வடஆற்காடு மாவட்டம்) தோற்றுவித்தான். அதனாலேயே இந்த இராமபக்தர் இராமசரிதத்தை இசைப்பாடலாகப் பாடத்தொடங்கி, ஸ்ரீராமாயணத்துள் முக்கியமானதெனச் சிறப்புறப் பாராட்டப்படும் சுந்தர காண்டத்தை முதன்முதலிற்பாடி, பின்னர் இப்பாலகாண்டத்தைப்பாடியுள்ளார். ஏனைய காண்டங்களும் விரைவில் வெளிவருமாறு நம்பெருமான் அருள்புரிக.

இந்த ஸ்ரீ ராமகாநாமிருதம், தனது நாமதேயத்தாலேயே ஸ்ரீ ராம சரிதத்தைக் கானமாகப் பாடும்படியமைந்து, செவிக்குணவாகத்தக்க சிறந்த நூலென்பதைத் தெரிவிக்கின்றது. உலகில் நடக்கும் துஷ்ப்ரசாரங்களைக் குறைத்திடத் திருவுள்ளம் பற்றிய ஸ்ரீ ராமபிரானது திருவருளால் தோன்றிய இந்த நூல், கற்றோரும் மற்றோரும் செவியினாற்பருகத் தக்க தேவருணவாகும்.

இனிய எளிய சிறந்த தமிழ் நடையிலமைந்த இந்நூலைக் கேட்கும் எவருடைய மனமும் ஸ்ரீ ராமபிரானது குணத்திலீடுபட்டு ஆனந்தக்கடலுளாழ்ந்து நன்னெறியில் திருந்தும் என்பது திண்ணம்.

இந்நூலைப் பரிசோதித்துச் செம்மையுறச் செய்தவர் விவேகாநந்தர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியரும் எனது மாணக்கருமாகிய வித்வான் C. ஜெகந்நாதாசார்யர் M. A. L. T., Dipl. Geog. ஆவர். இந்நூற்கு இசையமைத்தவர், இந்நூலை ஆக்கியோரின் தருமபத்தினியாரான ஸ்ரீமதி விஜயா ராமசுவாமி ஆவர். இவ்விசையமைப்பைப் பரிசோதித்தவர், அண்ணாமலைச் சர்வகலாசாலை சங்கீத பூஷணம் பிரம்ம ஸ்ரீ S. இராமநாதஐயர் ஆவர்.

இந்தக் கைங்கரியங்களைப் புரிந்தவர்களுக்கு இராமபிரான் எல்லா நன்மைகளையும் அருளுவானாக.

திருவல்லிக்கேணி      **வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்.**
20-8-55.

# முன்னுரை.



உலக மஹா இதிகாசங்களில் முதன்மையானது ஸ்ரீமத் ராமாயணம். பல கோணங்களில் ஆராயப்பட்டும், சுவைக்கப்பட்டும் வரும் இந்த இதிகாசத்திடை இன்றும், என்றும் அழகும் ஆன்மீகப்பண்பும் "சித்திரத்தெழுதிய செந்தாமரையொத்து" மிளிர்கின்றன, எனவே, இக்காதைக்கு முன்னுரைஎழுதுதல் ஒரு கைவிளக்கொளிகொண்டு கதிரவனொளியைக்காண முற்படுவதொக்கும். மரபினையொட்டியே இதை எழுதுவதாகும்.

இராகவன் புகழைக் கேட்டும் படித்தும் என்னுள்ளம் இளமை முதல் பலகாலம் கரைந்துநிற்கும். அவ்வீடுபாட்டின் உணர்ச்சிவேகமே அவ்வப்போழ்து சிலபாடல்களாகத் தேங்கிவிடும். சுந்தரகாண்டத்திடை இத்தகைய பாக்களைத் தொகுத்து வெளியிட ஊக்கினர் சிலஅறிஞர்கள். அவர்களில் காலஞ்சென்ற வள்ளல் ஸ்ரீமான் உ. வே. வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார்ஸ்வாமியும் ஒருவராவர்.

முதனூலையும் பலவாற்றுன வழிநூல்களையும் செவ்வன் ஆராய்ந்து அவற்றிலுள்ள அழகுகளைக்கண்டு உலகிற்குக் கூறவல்ல உரையாசிரியச் சக்கரவர்த்தி ஸ்ரீமான் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்யர் ஸ்வாமி, சைதாப்பேட்டை ஆசிரியர் கல்லூரி முன்னுள் தமிழாசிரியர் ஸ்ரீமான் உ. வே. கோ. ஸுதர்சநாசார்யர் ஸ்வாமி போன்ற மஹநீயர்கள் ஆசிகளும் ஆமோதிப்பும் வீணுகுமோ? இன்று பாலகாண்டம் வெளியாகிறது. இராமபக்தர்கள் ஆசிபெறின், ஏனைய காண்டங்களும் வெளிவரும்.

ஏதோ உணர்ச்சிவேகத்தால் வரும் உளறல்களில் சுவைகண்டு, பிழை களைந்து, உருவாக்கச் சலிப்பின்றி உழைத்து இந்த இரண்டு காண்டங்களையும் வெளியிட முற்பட்ட விவேகாநந்தர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் உ. வே. C. ஜெகந்நாதாசார்யர் ஸ்வாமி M. A., L. T., Dip. Geog. அவர்களின் ராம பக்தியை என்பிரணாமங்களானன்றி எவ்வாறு போற்ற முடியும்! இசைச் சுவைகண்டு இவ்விலக்கியத்திற்குத் தனிமதிப்பு ஊட்டி ஓர் முகவுரை ஈந்த சென்னைப் பல்கலைக் கழக இசைத்துறைத்தலைவர் ஸ்ரீமான் P. சாம்பமூர்த்தி யவர்கட்கும் என் பிரணாமங்கள் உரித்தானவை.

எனக்கு மூத்தவர்களான ஸ்ரீமான்கள் D. S. ராகவன், C. D. கிருஷ்ண மாசார்யர் இருவரும் என்னிடம் பரிவும் அன்பும் கொண்டு ஆசிதந்து இதனைப் பிரசுரிக்க உதவினர்கள். இம்முன்னுரையில் அவர்களை வணங்குவது என்கடன். தூயகலையுணர்ச்சிகொண்டு சென்னை பாரத் ஸ்டுடியோ நடத்திவரும் என் பழைய நண்பர் திருவாளர் V. நமசிவாயம் இந்நூல் முகப்புதாங்கிநிற்கும் அழகனுருவைத்திட்டித் தந்தார். என் அன்புகலந்த நன்றி அவருக்குரித்தானது.

இந்நூலுக்கோர் இசையுருவமைத்து, இதைப் பல்லாயிர மக்கள் முன்பு பாடிவரும் என்மனைவி ஸ்ரீமதி விஜயலக்ஷ்மியை முன்னுரையில் ஏதாவது சொல்லுகிருயா? என்றுகேட்டேன், அவள்தந்தபதிலைக் கீழே குறித்து முடிக்கிறேன். "ராமபக்தர்களின் நல்லாசியால் என்கணவர் கருத்துக்கிசைந்து அவருடன் நற்பணியேற்றுச் செய்யும் பேறுபெற்ற நான் ஏனைய காண்டங்களிலும் இப்பணிசெய்யும் பாக்கியமே கோரி வணங்குவதன்றி வேறில்லை" என்ருள்.

இந்நூலில் குற்றங்காணப்படின் அவைகளுக்குக் காரணம் என் மந்தமதி. குணமிருப்பின் அவை ராமகதையின் ஏற்றம் என்றுகொள்ள வேண்டுகிறேன். அவன் புகழ் பாடுங்கள்.

"பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ"

**S. V. ராமஸ்வாமி**



## அழகிய சிங்கர் துதி.

பள்ளியிலோதி வந்ததன்சிறுவன் வாயிலோர் ஆயிரநாமம்
ஒள்ளியவாகிப் போதவாங்கதனுக் கொன்றுமே பொறுப்பிலனுகிப்
பிள்ளையைச்சீறி வெகுண்டுதூண்புடைப்பப் பிறையெயிற்றனல்விழி
பேழ்வாய்
தெள்ளியசிங்க மாகியதேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே!

—திருமங்கை மன்னன்

## நம்மாழ்வார் துதி.

நாய்போற் பிறர்கடைதோறு நுழைந்தவரெச்சில் நச்சிப்
பேய்போல்திரியும் பிறவியினேனைப் பிறவி யெனு
நோய் போமருந்தென்னு நுன்திருவாய்மொழி நோக்குவித்துந்
தாய்போலுதவி செய்தாய்க் கடியேன் பண்டென் சாதித்ததே.

—கம்பன்

அவையடக்கம்

ஆரணநூல் வழியதனை வான்மீகி அழகுவட மொழியதனில்
அமுதாய்த் தந்தான்
சீரணிகள் கூட்டியதைக் கம்பனென்பான் சிந்தையள்ளும் தமிழதனுல்
சிறக்கச் செய்தான்
தாரணியிற் கவியருணு சலனுமதைத் தனிமோனை யழகுடனே தந்து
சென்ருன்
காரமா மிவர்பாதம் போற்றியதே கவிசொல்லத் துணிந்திட்டேன்
கமைகாட் டீரே.

—ஆக்கியோன்

## தியானம்

(ஸ்ரீராமன் தியானஸ்லோகம் – "வைதேஹீஸஹிதம்"
என்றதன் மொழிபெயர்ப்பு)

கற்பக மரத்தடியில் புட்பக மதன்நடுவில் ஒப்புயர் விலாத விசியில்
பொற்பதும சீதையொடு கற்றபர நாதியரும் சுற்றநீ வீற்றிருந்தே
தற்பர மளிக்கவல தத்துவமதைய னுமன் சொற்றிறனுடன்படிக்கப்
பற்பலமுநீச்வரர்கள் கற்றுனை வழிபடுதல் பெற்ற ஸ்ரீ மேகராமா.

ஸ்ரீ:

ஸ்ரீ ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ந ஹநுமத் ஸமேத ஸ்ரீரகுநந்தந பரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ ராம காநாமிருதம்

## [பால காண்டம்]

### கடவுள் வணக்கம்.

செவ்வரிநற் கருநெடுங்கண் சீதைக் காகிச்
 சினவிடையோன் சிலையிறுத்து மழுவா ளேந்தி
வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றி கொண்டு
 வேல்வேந்தர் பகைநடிந்த வீரன் தன்னை
தெவ்வரஞ்சு நெடும்புரிசை உயர்ந்த பாங்கர்த்
 தில்லைநகர்த் திருச்சித்ர கூடந் தன்னுள்
எவ்வரிவெஞ் சிலைத்தடக்கை இராமன் தன்னை
 இறைஞ்சுவா ரிணையடியே இறைஞ்சி னேனே.

[குலசேகரப் பெருமாள்]

### அத்தியாயம்—1.

ராகம் - சங்கராபரணம் - ஸம்பூர்ணம்.

[ஸ்ரீமத் ராமாயணத்தின் அவதார வரலாறும், வால்மீகி-நாரத ஸம்வாதமும்]

முன்னம் புற்றில் வந்தான்—உலகோர்
 துன்பம் போக்கும் நினைவால்
சொன்ன ராமகதை சொல்லக் குசலவர்
 சுருதி கூட்ட லானர். 1

வேத மெல்லாம் வியந்தே—ஓர்
 கீத மொலித் ததுவே
நாத வரசனென நரர்கள் புகழ்ந்திடும்
 நாரத னது கேட்டான். 2

விண்ணிருந்து மண்மேல்—கேட்டே
வியந்து சேர வாங்கே
மண்ணிருந்துவெளி வந்த வான்மீகி
மகிழ்ந்து கேட்கலானன்
—நரகமதை சொர்க்க மாக்கலானுன். 3

நாரத மா முனியே !—சொல்வீர்
நானறிந் திட வென்றே
பார்தனில் எவனோர் பரம புருஷனெனப்
பாடத் தக்க மனிதன் ? 4

பண்டித னென்பவன் யார் ?—பெரியோர்
தொண்டி லுயர்ந்தவன் யார் ?
எண்டிசை யுள்ளோர் கண்டு குளிர்ந்திடக்
கொண்டல் போன்றவன் யார் ? 5

அழுக்கா றற்றவன் யார் ?—உலகில்
ஆண்மை மிகுந்தவன் யார் ?
ஒழுக்க மெல்லாமொரு கொடியாய்ப் படரக்
கொழுகொம் பானவன் யார் ? 6

வித்தை யுணர்ந்தவன் யார் ?—வேதமது
விளங்க வாழ்ந்தவன் யார் ?
சத்திய மேதன் சாசுவத நிதியெனச்
சாந்தி யடைந்தவன் யார் ? 7

ஆரண வழி தன்னை—அறிவால்
ஆய்ந்து வாழ்ந்தவன் யார் ?
பூரண னென்றிவ் வுலகோர் போற்றிடப்
புகழை வளர்த்தவன் யார் ? 8

கல்வியி னெல்லை யார் ?—கலைகளின்
எல்லை யுணர்ந்தவன் யார் ?
சொல்வன் மையுடன் இனிமை தோன்றுஞ்
சொற்கள் பேசுபவன் யார் ? 9

சொன்ன சொல் காப்பவன் யார் ?—மேவினோர்
இன்னல் போக்குபவன் யார் ?
தன்னலம் கருதா துலகொடு மனைவியைத்
தியாகம் செய்தவன் யார் ? 10

வீர னென்பவன் யார்?—ஒரேவொரு
தாரம் கொண்டவன் யார்?
கூரிய வாளிக ளவையால் உலகோர்
கொடுமை போக்கியவன் யார்? 11
—ஸ்ரீராம ராம் ராம்.

---

## அத்தியாயம்—2.

### ராகம் - கீரவாணி.

[நாரத முனிவரின் பதில்; இராமாயண ஸங்க்ரஹம்; நூற்பயன்]

சொன்ன குணங்க ளெல்லாம்—முனியே!
தன்னிடம் கொண்டவ னாய்
மன்னவன் தயரதன் மகனா யுலகில்
மாலவன் முன் வந்தான். 12

கோசல நாடுட னிவ்—வுலகும்
பாசங் கொள்ளு மழகன்
கோசிக னிடம்முன் குருகுல மதனைக்
கூடி நடத் திட்டான் 13

சிவன்வில் லொடித்திட் டான்—சீதையெனும்
தவப்பெண் கைதொட் டான்
புவன மெலாம்தன் தம்பி யடைந்திடப்
புகுந்தனன் கானகமே. 14

தந்தைசொல் காக்க வந்தே—பரதனது
நிந்தை நீக்க நினைந்தே
தந்தனன் பாதுகை தனதிரு துணையெனத்
தம்பி மகிழ்ந் திட்டான். 15

தேவியைப் பிரித்திட்டான்—பாவியவன்
ராவண னெனு மரக்கன்
ஏவிய வனுமன் இலங்கையி லாங்கோர்
எமனெனப் புகுந் திட்டான். 16

ஊரைக் கண்டு சிறையில்—உலருமவ்
உத்தமி யைக் கண்டான்
போரைக் கூட்டியுடன் பொருத அரக்கர்வலி
போக்கிச் செயம் கொண்டான். 17

மீண்டு வந்து ஐயன்—கடலைத்
தாண்டப் பால மிட்டான்
நீண்ட போர்புரிந் தரக்கர் கூட்டமதை
நீறு படச் செய்தான். 18

அன்னை சொல் பதினான்கு—ஆண்டு செலத்
தன்னகர் வந் தாங்கே
பின்னவன் பரதன் சூட்டிய முடியோடு
மன்னவ னாய் நின்றான். 19

நேர்மையும் நெறி யுடனே—புத்தி
கூர்மையும் குணங் கொண்ட
பார்மகிழ்ந் திடநீர் கேட்ட இவன்கதை
பாபம் போக்கச் சொல்வீர். 20

என்று சொல்லி மறைந்தான்—நாரதன்
நன்றென வான்மீகி
சென்று வெளியிலோர் மனமது கலங்கும்
செயலைக் கண்டு கவல்வான். 21

கூடிய க்ரௌஞ்ச மதைக்—கொடியனோர்
வேடுவன் தன தம்பால்
சாடிடப் பெண்புள் சடலம் துடித்துச்
சாதல் கண்டு நெகிழ்வான். 22

அவனை நோக்கிச் சொற்கள்—முனிவன்
அலறிக் கூவ வாங்கே
தவநிலை குன்றிடத் தன்னை யிகழ்ந்தே
தவச்சாலையை யடைந்தான். 23

சிந்தனை யடையுங் கால்—பிரமன்
வந்து தேற்றிச் சொல்வான்
உந்தன் சொற்களே ராகவன் கதையது
உலகை மகிழ் விக்கும். 24

அன்னவர் திட்டிய சொல்—குசலவர்
சொன்ன தெய்வ கீதம்
முன்னவர் காட்டிய நன்னெறி மதியுடன்
பின்னவர் வாழ்ந் திடவே. 25

மக்கள் தேவ ராவார்—தேவரும்
ஒக்கக் கடவு ளாவார்
இக்கதை கேட்டவர் துக்கமோடு பிணி
சிக்கல் நீங்கி வாழ்வார். 26.

—ஸ்ரீராம ராம் ராம்.

## அத்தியாயம்—3.

ராகம் - மாண்டு.

[சரயூ நதிச் சிறப்பு]

கடலுண்டுவானில் கருமேகமோடிக் கனமாரிவிழ மலைமேல்
படைகொண்டுமோத இடிமின்னல்தோன்றப் படர்வானவிழ்ச்சி காணும்
சடைகொண்டகங்கை யெனவீழும்நீரைச் சரயூவிழுங்கி விம்மும்
கோடைகொண்டுதேவர் குளிரப்புவிக்கண் குறைவற்றநாட்டி னூறே. 27

மலைநின்றவாகை யகில்சந்தனத்தின் மரமோடடர்ந்த மலரும்
அலைநின்றநீரில் அணுவென்றுசூழ அலங்காரமுத்தும் பொன்னும்
குலைநின்றவாழை குழுமித்திரண்டு குடிகோசலத்தை யூட்டி
நிலைநின்றபண்ணை நிதமும்தழைக்க நிதிகூட்டுவிக்கும் சரயூ. 28

உயர்வேதமோதும் மறையோர்க்குமாகி உழவர்க்குமூணைத் தந்தே
அயர்வேயொழிக்க அமைந்திட்டகாவை அணைத்தேவளர்க்கு மந்நீர்
மயல்மாதருடல் மதந்தீரத்தென்றல் மணங்கொண்டுவீச வெங்கும்
மயர்வேகளைந்து மதிதந்துநாளும் மருதஞ்செழிக்கப் பாயும். 29

சுதிகொண்டுபாயும் சரயூவின்கீதச் சுவைகொண்டுநாளும் பொங்கி
மதுவுண்டுகாவில் மயலேறிவண்டு மலரேவிடுத்து ஒன்றாய்
நதிகண்டுமோதி நலிவெய்திமாதர் நயனங்கள்கண்டு வெள்கி
நிதிகண்டநீசர் நினைவேயெனத்தம் நிலையேயடைந்து மங்கும். 30

இவ்வாறுபாயும் இயல்பால்நகர்க்கண் இலையென்பதொன்று மிலையாய்
செவ்வாதுசாந்து செறிசந்தனத்தில் செம்பொன்குவிப்பர் வணிகர்
ஒவ்வாதசெய்கை ஒன்றின்றிமக்கள் ஒளிபெற்றுநாளும் வாழ்வர்
எவ்வாறுசொல்வ தென்போன்றமூகர் இவர்பெற்றவாழ்வை நாவால். 31

## அத்தியாயம்—4.

ராகம் - சுத்தசாவேரி.

[தயரதன் அரசியல்]

கோசல மெனுமணி யார நடுவதாய்க் கோத்த வைர மெனவே
பூசுர ரெல்லாம் தேவர் வாழ்வுகொளப் பூத்தத யோத்தி நகர்
வாசவ னுந்தன் னிடர்போக் கவாங்கு வந்து பணித லாலே
தேசு கொண்டவிந் நகர மாந்தருள் தேவையென்ப தில்லை
—இவர் பெறு பண்புக் கெல்லையில்லை. 32

ஆகம மொடு நூல் வேத மனைத்தையும் அறியா தவரில்லை
தேகி யென்பவர்க் கில்லை யென்பதித் தேச மெங்கு மில்லை
சோக மென்பதிலை வேண்டுவ தொன்றிலை சோர் வெவர்க்கு மில்லை
போக மென்பதிவர் நாளும் தேவர்பாற் போடும் பிச்சை யன்றோ
—குபேரன்கண் டடைவன் லச்சை யன்றோ. 33

அணங்கனை யாராங் கழகு தெய்வமென அன்பு கொண்டு தம்முள்
இணங்கி வாழுமவ் வாடவர் வீரம் இளகி மங்கச் செய்வார்
குணங்க ளோடுபொன் னாரமணிகலம் பூண்டு பெண்டி ரெல்லாம்
பிணங்கு வாரெனில் ஊடல தொன்றே பிறிது பிணக்கிலையே.
—அணியும் கலனும் கணக்கிலையே. 34

வானம் மங்கையர் கற்பு கண்டஞ்சி வடிக்கும் மாரி மூன்றே
தானம் வாங்குபவர் ஈகை கண்டஞ்சித் தம்முள் வெட்கிச் செல்வார்
பானமாக விவர் கொண்டு வாழ்வதப் பாற்கட லமுத மெனில்
ஊன மேதுபின் மரண மேதிவர்க் குயர்வு மேலு முண்டோ?
—தேவர்கண் டயர்வு கொள்வரன்றோ? 35

பெருத்த வீரனும் தயையொடு புகழும் பேரும் கொண்ட வள்ளல்
வருத்தங் கொண்டதொரு குடியுமந் நாட்டில் வாழக்கண்டு தரியான்
திருத்தமாகப்பெரும் தரும நூல்களைத் தினமு மாய்ந்து செங்கோல்
பொருத்த மாகச்செயும் அரசன் தயரதன் பொலியப் பெற்ற நாடே
—பல்வளம் மலியப் பெற்ற நாடே. 36

கால மறிந்தவர் கடமை செய்யவலர் காவல னமைச்சர்கள்
சீல முள்ளபேர் எண்ம ராமவர் சிகரம் சுமந் திரனே
வேலும் வாளும்கொண் டெண்ணி லாதவர் வேந்தன் படைஞ ராங்கே
ஆல முண்டவவ் வரன்படை தனக்கே அச்ச மூட்ட வல்லார்
—எனினுமவர் அன்பு கொண்ட சொல்லார். 37

நாளு மறிவதே ஞாயி றேடுபிறை நாட்டில் திகழ்வது போல்
ஆளு மரசனது குரு வசிட்டனெடு ஆங்கு வாமதேவர்
சீல மோடுநல் லறமுற வாட்சியைச் சிறக்கச் செய்து நின்றார்
கால னேடுபல தேவர் தருமமதைக் கற்று நட்புக் கொண்டார்
—இவருறவு பெற்றுவாழ்வு கண்டார். 38

இந்திர னமரா வதியை யாள்வதுபோல் இமையவர் வியந்திடவே
தந்தை மனுமுதல் அயோத்தி நகர்தனைத் தயரத னுண்டு வந்தான்
அந்த வழியிற்பின் அந்நக ரதனை அரசுசெய்ய வென்றே
சொந்த மானதொரு மகவிலை யென்றே சோகங் கொள்ள லானன்
—தயரதன் வேள்வி எண்ண லானன். 39

மன மறிந்துமுறை சொல்லி வாழ்வுதரும் மந்திரி சுமந்திரனை
வினவ மற்றுமுள குரு வசிட்டரொடு வேதிய ரும்வந்தார்
தனய னின்றித்தான் தனயரி லுற்றதொரு தாழ்மை போக்கவன்றே
மன முவந்துபரி மேதம் செய்வையென மாதவர் கூறிடுவார்
—தயரதன் வேதனை யாறிடுவான். 40

---

## அத்தியாயம்—5.

### ராகம் - பேஹாக்

[தயரதன் புத்திரகாமேஷ்டியாகம் செய்ய ரிசிய சிருங்கரை அங்க நாட்டினின்றும் அழைத்து வருதல்.]

வணங்கி விடை கொண்டான்—தயரதன்
இணங் கியாணை யிட்டான்/ பிணங்கான்
சுணங்கி டாதுபல மந்திரி சேனைக்
கணங்கள் வேலை செய்தார்
—மணிகளால் யாகசாலை வேய்ந்தார். 41

புரவி ஏவு முன்னர்—சுமந்திரன்
அரசனுக் கிவை சொன்னன்
இருசிய சிங்கர் எனுமிரு டியரை
வரவழி தேடு கென்றான்
—நமது குருமொழி யிதுவென்றான். 42

அன்னவர் யாரென்றே—மன்னனிடம்
பின்னு முரைத்திடுவான்—
முன்னெருநாள் சனகாதியர் தன்னிடம்
சொன்னகதை சொல்வான். 43

நெற்றிக் கொம்பு கொண்டான்—அம்முனிவன்
கற்ற வேள்வி யொன்றால்
நற்றவம் செய்தே மக்கள் பாக்கியம்
பெற்று வாழ்வ மென்றான்
—அவர் கதை முற்றும் கேட்பி ரென்றான். 44

கங்கை யின்றி மக்கள்—முன்னாள்
அங்க நாட்டி னிடையே
மங்கிடப் பஞ்சம் மல்கவு மிருசிய
சிங்கரை யழையென்றார் முனிவரர்
—பொங்கிப் பொழியு மென்றார். 45

உலக மொன்று மறியா—உத்தமனை
விலைமகளி ரண்மிச் சேர்ந்தே
முல்லையழ கொடுதம் முறுவல் வேல்விழிகள்
வலையை விச லானார்
—கண்டே முனிவன் பாசமானான். 46

அடர்ந்த காட்டை விட்டே—முனிவன்
தொடர்ந்து நாடு சேர்ந்தான்
படர்ந்து மேகமழை பலதிசை பொழியவும்
முடிந்த தின்னல் நாட்டில்
—ஜய ராம ராம ராம் ராம். 47

மின்னல் போன்ற இடையாள்—சாந்தையை
அன்னவர் மணந் திட்டே
மன்னவன் பிழைகளைப் பொறுத்து மங்கநகர்
தன்னக ராய் நின்றான்
—ஜய ராம ராம ராம் ராம். 48

இக்கதை கேட் டரசன்—குருவிடம்
தக்க விடை கொண்டான்
அக்கண மேபல அழகிய பொருளொடு
மிக்க சேனை கொண்டான்
—தயரதன் துக்கம் நீங்கிச் சென்றான். 49

அங்க நாட்டி னிடையே—அச்சேனை
தங்கி நிற்க வாங்கே
மங்கள வரவுகள் ரோம பாதனும்
மன்னவ னும் செய்தான்
—மற்றோர் சங்கநாதம் செய்தார். 50

ரிசிய சிருங்க முனியை—அண்டிப்பின்
விவரம் விளக்கி டவும்
இசைய முனிவனும் இணங்கித் தங்கள்
விசையொடு புறப்பட்டார்
—அயோத்தியர் மெத்தக் களித்திட்டார். 51

முனிவரை வர வேற்றே—வசிட்டன்
வினவினன் பல பலவும்
கனிவுடன் விடைதர யாகமதனைப் பின்
பணிவொடு தொடங் கினரே
—விண்ணவர் வானில் நெருங்கினரே
—ஸ்ரீராம ராம் ராம். 52

---

## அத்தியாயம்—6.

**ராகம் - ஆபேரி.**

**[யாக நிகழ்ச்சி]**

அரச னேவ லென்றே—திசைதிசை
முரசு கொட்டிப்பின் வேள்வி யாங்கென் று
முழக்கஞ் செய்ய லானூர். 53

வேத நுட்ப மறியும்—எண்ணிலர்
வேதிய ரொடுபல நீதி கண்டபெரு
வேந்தரும் வர லானூர். 54

ஓலை கொண்டு சென்றூர்—அழைத்திட
சில சனகரொடு காசி ராசரும்
சிந்து மன்னர் வந்தார். 55

அங்க வரச னவனும்—கீர்த்திமிகு
வங்க கொங்கணக் கேகய மன்னரும்
அங்குக் கூட லானூர். 56

தச்சர் ஒன்று கூடிப்—பற்பல
மச்சு மாளிகை மணியொடு பொன்னால்
மயனென நிருமித் தார். 57

நாட்டிய சாலை யிடை—இவர்
திட்டிய சித்திரம் கண்டவர் உள்ளம்
வியப்புக் கொண்டு நின்றூர். 58

வீதி நகர மெல்லாம்—ஒளி
சோதி வீசப்பல தீபம் திகழ்ந்திடச்
சோலை யிடைக ளெல்லாம் 59

சிலைகள் நிற்க வைத்தார்—சிற்பக்
கலையி னெல்லையெனக் கண்டவர் புகழும்
காட்சி யான தவ்வூர்— அதன்
மாட்சி சொல்லப்போமோ. 60

அன்ன சாலை பலவும்—நகரிடை
உண்ண வருபவர்க் குருசி யூட்டியவர்
உள்ளங் களிக்கச் செய்யும். 61

தோரணக் கொடி யில்லா—மாளிகையும்
பூரண மில்லா மனமொடு யாருமப்
புனித நாட்டி லில்லை. 62

பாய்ந்திடும் சரயூ வின்—வடக்கே
ஆய்ந்து யாகஞ்செய நிலமெனப் பொன்னேர்
ஆழ வுழவு செய்தார். 63

கொண்டு குருவி னுணை—ஊருளோர்
பண்டி பண்டியாய் வேள்விப் பொருள்களொடு
பெருக்கு மாறு சென்றார். 64

தங்கக் கற்கள் கொண்டே—வேதிகை
பற்பலவாய் அங்குச் சிங்கம் கருடனென
அமைத்துக் கட்டி விட்டார். 65

குறித்த காலத் தன்றே—குருமார்
பெருத்த கூட்டமாய் மங்களம் முழங்கிடப்
பெருகிச் செல்ல லானார். 66

தேவிய ரொடு மன்னன்—யாகமதில்
ஆவி போன்றபே ரமைச்சர் புடைசூழ
ஆங்கு வந்து நின்றான். 67

வேதிகை வலம் வந்தே—தயர தன்
வேதியர் மற்றவர் மெச்ச தானங்கள்
வேண்டிய வகை செய்தான். 68

உலக மேழி ரண்டும்—கண்டே
பலபல மங்கள வாழ்த்து முழங்கிப்பின்
பங் கெடுத்த ததனில். 69

யாகம் தொடங்கி விட்டார்—புனித அவிர்ப்
பாகம் கொள்ளப்பல தேவர்கூடியே
பாய்ந்தெழுந்து வந்தார்.
—ஸ்ரீராம ராம் ராம் 70

## அத்தியாயம்—7.

ராகம் - நவரஸ கன்னடா.

[ தேவர்கள் அரக்கரின்னலைப் போக்கத் திருமாலை யவதரிக்க வேண்ட அவர் இணங்குதலும், யாக புருஷன் தோன்றி அளித்த பாயசத்தைத் தயரதன் தன் மனைவியர்க்குப் பகிர்ந்தளித்தலும்.]

ஒன்றுகூடி நின்றதேவர் உவகை யோடுபின்
அன்றுகூடி யமலன்கேட்க அறைய லாயினர்
மன்றுளாடும் சிவனுமாங்கு மனதில் கண்டனன்
நின்றரக்கர் குவலயத்தை நிலைகு லைத்தலை. 71

அரக்கர்கோனி ராவணன்தன் ஆணவத் தினால்
சிறக்கும்தரும நெறிகள் தம்மை சீர்குலைப் பதால்
பிறக்குமாறு சங்குதிகிரி பிடித்த வண்ணலை
இரக்கவவனும் மனங்குளிர்ந்து இவைகள் சொல்லுவான். 72

தானவர்க்கும் தேவர்கட்கும் தாழ்மை தோன்றவே
மீனொடாமை பன்றிசிங்க மாகிப் போக்கினேம்
நானுமக்கு நன்மைசெய்ய நகரில் தயரதன்
தானுகக்கு மக்களாகித் தருமம் காக்கிறோம். 73

வரம்நிறைந்து வலிவுபெற்ற வாள ரக்கனை
நரன்குரங்கு நீங்கலாக நலிவு செய்திடும்
திறன்படைத்த வர்களில்லை திரண்டு நீங்களும்
உரம்படைத்த கவிகளாகி உலகு வாருங்கள். 74

என்றுசொல்ல மாலவன் இசைந்து தேவர்கள்
அன்றுவான் மறைந்துவந் தயோத்தி யெய்தினர்
நின்றுவேள்வி அந்தணர்கள் நினைத்த ளித்ததைத்
தின்றுஆசி கூறித்தேவ லோக மெய்தினர். 75

மக்கட்பேறு தருகவென்று மந்தி ரத்தினல்
தக்கவாறு ரிசியசிருங்கர் தந்த வேள்வியில்
புக்கெழுந்த தெரியிலாங்கு பூத மொன்றரோ!
முக்கணனு மஞ்சுமாறு முறுவல் பூத்ததே. 76

நீலமேனி செங்கணேடு நீண்ட மீசையும்
காலன்வெள்கும் கட்டமைந்த கரிய தோற்றமும்
கோலவாரம் பூண்டுகையில் கோதி லாதபொன்
தாலவட்டில் மூடியோடு தாங்கி நின்றதே. 77

"முந்தையாரின் தவமதேநீர் வந்ததென்று" கோ
வந்தபூத மதனையாங்கு வணங்கி நின்றனன்
"இந்தத்தேவ பாயசத்தை யிசைந்து பெற்றுக்கொண்(டு)
உந்தம்மனைவி மூவர்கொள்ள உவந்த ளித்திடும்." 78

"உலகமுள்ள வரையிலுமது குலம தோங்கவே
கலையினெல்லை யாகநான்கு காளை தோன்றுவர்
பலமிதேநும் வேள்விக்"கென்று பகர்ந்து பூதமும்
செலவுகொண்டு சிறுமெரியில் சென்று புக்கதே. 79

'தன்ய'னென்று அமுதமதனைத் தலையில் தாங்கியே
அனைவராசி யுடனும்நின்ற அந்தணர்கள் சொல்
நினைவுகொண்டு மனங்குளிர்ந்தந் நிதியைத் தாங்கியே
மனைவியர்க்குப் பகிர்ந்தளிக்க மகிழ்ந்து சென்றனன். 80

அமுதிற்பாதி முதலவட்கு அளித்து மீந்தவம்
மமுதிற்பாதி சுமித்திரைக்கு அளித்து வந்தனன்
குமுதவிழியள் கேகயட்குக் குறைந்த வந்நல
லமுதிற்பாதி ஈந்துமேலும் அரசன் செய்துவான். 81

எஞ்சியுள்ள சுதையைப்பின்னும் எழில் சுமித்திரை
மிஞ்சிடாம லுண்ணவிந்து மிகமகிழ்ந் தனன்
சஞ்சலங்கள் தீர்ந்தவென்று சங்குகொண்டு வான்
கொஞ்சமல்ல தேவர்கூடிக் கொந்த ளித்ததே. 82

ஸ்ரீராம ராம ராம்.



## அத்தியாயம்—8.

**ராகம் - ஸ்ரீராகம்.**

**[ஸ்ரீ ராமாவதாரம்—பிள்ளைப்பருவம்.]**

வேள்வி யதனையுல கேழும்வியந்திட வேந்தன் பூர்த்தி கண்டான்
கேள்வி கல்விமிகு மனைவரும்தானம் கேட்டவாறு கொண்டார்
தாள் பணிந்துமத் தாபதராசிகள் தயரதன் தலைக்கொண்டான்
மாள்வதுண்மையினி யரக்கர் கூட்டமென மாதவர் களிகொண்டார். 83

வந்த மாதவரும் ரிசியசிருங்கரொடு வாழ்த்தி விடைகொண்டார்
நிந்தை நீக்கவரும் மக்கட்பேறதனை நினைத்து நாள் கழித்தான்
விந்தை யானபே ரழகுட னரசியர் விளங்கி வயாவுற்றுர்
வந்து புவியில்பெரு வானரங்களாய் வகுத்து தேவர் வாழ்ந்தார். 84

பத்து மிரண்டே மாதம் செல்லவப் பத்தினி கோசலையும்
உத்தம மானவச் சித்திரை மாதத் துள்ள வளர்பிறைநட்
சத்திர மாம்புனர் பூசம் நவமியொடு நாடிய கடகமதில்
புத்திர னுய்ச்சகந் நாதன் விட்டுணுவின் பொலிவில் பாதிபெற்றுள்
உலகம்—மகிழ க்யாதியுற்றுள். 85

இந்திரன் தன்னை யீன்ற வதிதிபோல் இருந்தனள் கோசலையும்
அந்த வேளைவரு மீன லக்கினம் அருமைப் பூசமதிலே
சிந்தை குளிரவக் கேகயன் மகளும் சிறக்கப் பரத னீந்தாள்
தந்து சுமித்திரை மகவா யிருவரைத் தரணி மெச்ச நின்றுள். 86

பின்னவ ரிருவரும் கடக மாயில்யம் பிறந்த நல்லவேளை
தன்னிக ரொருவ ரில்லை யினியெனத் தயரதன் மகிழ்ந்திட்டான்
கின்னரர் தேவர் கந்தரு வரும்நல் கீதம் பாடலுற்றுர்
அந்நக ரிற்பேர் அழகு விழாவொன் றன்று தொடங்கிட்டார். 87

வீதிக ளெல்லாம் தோரண மொடுகொடி வீசக்கட்ட லானுர்
கோதி லாதவெண் முத்தின பொடிகொண்டு கோலம் திட்டலானுர்
சேதி கேட்ட பெரும் பாடகர் நடிகர் சேர்ந்து கூட்டமானுர்
போதி லாதிரவு பகலாய் மக்களும் பொங்கி யாடலானுர். 88

மண்ணெடு பொன்னணி மந்தை யாநிரைகள் மன்னன் தானம் செய்தான்
பண்ணி சைத்துவரும் பாவலர் வறுமை பறக்கச் செல்வம் பெய்தான்
எண்ணி வசிட்டர் ராமலட்சுமண ரென்று பெயர் வைத்தார்
பின்னவர் பரதன் சத்ருக்னன் னெனப் பிரியமோ டழைத்தார். 89

சத்துவ நின்மல மானவ யோத்தியைச் சார்ந்த மக்கள் மனதில்
நித்தம் நித்தமோர் அழகொடு நால்வரும் நிலவென வளர்ந்திட்டார்
அத்திர மொடுபரி யானைதே ரோட்டும் அரிய கலைக ளெல்லாம்
வைத்தெ டுக்குமோர் நிதியென நால்வரும் வேண்டுவ னவும்கற்ருர். 90

மக்களைக் கண்டே மகிழ்ந்து மன்னவன் மனங்குளிர்ந்து நின்ருன்
ஒக்க முன்னவன் உயிரென இலக்குவன் ஒத்த ஜோடி யானுன்
எக்கண மும்பிரி யாதவர் வளரும் எழில மக்கள் கண்டார்
தக்க பருவமதில் வசிட்ட னிடமவர் தருமம் கற்கலானுர். 91

இணைய தாகவி நூடலொரு உயிரென இளையவ னெடுபரதன்
குணமதோடுமன வோட்டமெண்ணமும் கொண்டுவளரலானுர்
பிணிகள் போக்கவுள அருமருந் தெனவிப் பிள்ளை நால்வர் தம்மை
உணவு கொள்ளுமுன் ஒவ்வொரு நாளும் உவகையோடு காண்பார். 92

ஏற்ற வயதுவர அரசன் வசிட்டனை ஏவி நூல் மணத்தைப்
போற்ற எவ்வுலகும் தேவ ராசியொடு பொலியப் புனைந்திட்டார்
ஆற்ற லோடுபல வேத நுண்ணறிவு மமைய வன்று கற்ருர்
கூற்று மஞ்சும்பெரு வீர மோடுமறை கூட்டி மேதையுற்ருர். 93

காரு லாவுநீர் மேகம் போன்றவக் காளை ராமன் பண்பாம்
ஏறு போனநடை யேற்ற சொல்லினிமை யெவரு மறிந்திட்டார்
வீறு கொண்ட புயம் பெரியர் பணிவிடைகள் வேண்டிச் செய்யும் நாளும்
ஊருளாரும்தாய் மார்களும் தந்தையும் உயர்வு பெற்று வந்தார். 94

வேண்டுவ தினியொன் றிலனுய்த் தயரத வேந்த னுட்சி செய்தான்
ஆண்டு தோறுமம் மக்கள் நால்வரும் அறிவில் வளர்ந்திட்டார்
பூண்டு காதலூர் மக்கள் ராகவனைப் புகழ்ந்து மகிழ்ந்திட்டார்
தீண்டிடு மோகண் திருட்டி யென்றவர் தினம்தினம் தொழுதிட்டார். 95

ஸ்ரீராம ராம் ராம்.

---

## அத்தியாயம்—9.

### ராகம் - நாகஸ்வராவளி

**[தன் மக்கள் திருமணத்தைப்பற்றித் தயரதன் வசிட்டாதிகளிடம் பேசுகையில், விசுவாமித்திரன் தோன்றித் தன் வேள்வி காக்க இராகவனை யாசித்தல். தயரதன் தயங்க முனிவன் முனிதல்.]**

தக்க முனிவரொடு மந்திரி கூடவும் தயரத னுங்கோர் நாள்
மக்கள் நால்வரின் மணமது நினைந்தே மகிழ்ந்து பேசலுற்ருன்
அக்கண மோர்பெரும் ஆண்டவ னுணை அயோத்தி யடைவதுபோல்
மிக்க வேள்வியின் உருவாம் விசுவா மித்திர ராங்குற்ருர். 96

கந்த வேளைமுன் தந்த முதல்வனைக் காணுமிந்தி ரன்போல்
வந்த மாதவனை யெதிர்கொண் டனன்பல வாத்திய ஒலிகளுடன்
"இந்த நாடுசெய் தவமோ யிலையென் முந்தை யாரின் தவமோ
வந்த திங்குநீர்" என்று தயரதன் வாழ்த்தி வணங்கிட்டான்
காதிமகன்—கேட்டு மகிழ்ந்திட்டான். 97

தரும வரசியலை முனிவனும் வியந்தான் தங்கும் வசிட்டனுடன்
பெருமை கூட்டுமம் முனிவன் பேசவும் பேருவ கைகொண்டான்
"சிறுமை தாங்குமிவ் வேழை யின்பணி சிறக்கச் செய்ய வேநீர்
வரும தானபெரும் பாக்கியம் பெற்றேன் வகுக்க வேணு"மென்றான்
தயரதன்—வணங்கியாங்கு நின்றான். 98

நாட்டு நன்மையொடு மக்கள் சுற்றமவர் நன்மையும் வினவிப்பின்
வாட்ட மின்றித்தான் வந்தவேலையை வாய்விடுத் துரைப்பான்
"ஆட்ட மின்றியறம் ஓங்கிட வும்புவி யனைத்தும் செழித்திடவும்
கூட்டிவேள்வியான் தொடங்கியு ளேனதில் குறுக்கிடுள்ளனகாண்". 99

"வாழ்வை யொழிக்கும் வலியுள பொல்லா ஊழ்வினை யவையேபோல்
தாழ்மை யுள்ளபே ரரக்க ரிருவரிதைத் தடங்கல் செய்யலுற்றார்
போழ்தினி லவரைப் போக்கிடு வேனென் பொங்கு கோபமதனால்
பாழ்படு மெந்தன் வேள்வி யென்றுனைப் பார்க்கவந் துளேன்யான்" 100

சினமொடுமாரீ சன்சுவாகுவைச் சேர்ந்த வரக்கர் கூட்டம்
தனையழிக்கும் பேராற்றல் கொண்டவன் தலைவ னுந்தன் மகனே
நினைமகிழ் வித்திட வந்த சிறுவனென நீநினைத்தல் வேண்டாம்
அனைவரிலென்போல் வசிட்டனுதியர் அறிவரவன் பெருமை. 101

"வந்து வேள்வியதைக் காக்க ராகவனை வழங்கவேண்டு"மென்றான்
வெந்த புண்ணில்கனல் நுழைதல்போன் றரசன் வேதனையுறலானான்
தந்தை யென்ற பெரும் பந்தவலியினால் தான் மயங்கிநின்றான்
மைந்தன் ராகவனை விட்டுவாழ்தலுறின் மாள்வதுண்மை யென்றான். 102

"ஐய" சிறுவனவன் அரக்கரைச்செயித்திடும் ஆற்றலெங்கு கண்டீர்
பொய்யதானபல மாயப்போர்களைப் புரியவல்லரவர்கள்
உய்யவேள்வியென் படையுடனின்றே உவகையோடு வருவேன்
வையமோடுவான் வரினு மோட்டுவேன் வாருமென்றுசொன்னான். 103

வேறு—(ஸ்வரக் குறிப்பை நோக்கவும்)

மன்னவன்சொல்லை மாமுனிகேட்டான்-அன்னவனைக்கண் டவையில்
பொங்கினான்

கோலமுனிவனுளம் கொதித்தெழுந்திட-ஞாலமிருண்டது
ஞாயிறுமங்கிட. 104

உங்கள்குலத்தோர் ஒருவருமிதுபோல்-தங்கள்சொல்லேயே தளரவிட்ட
மங்களமாயுன் மகனுடன்நீயே-தங்கி வாழ்ந்திடித்தரணிசிரித்திட [தில
ராம ராம ராம் ராம். 105

---

## அத்தியாயம்—10.

### ராகம் - வாசஸ்பதி.

**[இராமனைப்பெற்றுக் கோசிகன் களித்து இராம லட்சுமணரை அழைத்துச் செல்லல்]**

என்று சொல்லிமுனி எழவும்—வசிட்டன்
அன்றுசொல்லுவா னரசனறிந்திட—ஸ்ரீராமராம.

“கலைகளோடுபல மங்களமுந்தன் கண்மணி ராமனையே
நிலையதாகக்கொள வந்துளவின்றே நீயவைவிடுவாயோ?
மலைவிலாதுனது மகனையிக்கணம் மாமுனி கேட்பதுபோல்
செலவுதந்துவிடும் சேமமோடுபுகழ் சேருமவனை” யென்ருன்
—அமரர்கள் உலகுமுய்யு மென்ருன். 106

குருமொழியாலே குளிர்ந்துமன்னவன் “கொணர்மின்ராம” னென்ருன்
இருவராகத்தன் இளையனேடவன் இசைந்துவந்து நின்ருன்
“அருமையானவிப் பெரியரானகுரு அடைவதுங்கள் பாக்யம்
வருவதற்குமேல் நன்மைகளுளபல வணங்கி யுடன்செல்வீர்
—பணி செய்தவர் மனம் வெல்வீர்” 107

“மக்களிவரைநீர் கொண்டுசெல்லுமும் மனதுபோல” வென்ருன்
“இக்கணமுதலிவர் தந்தைதாயுநீர் இலகுகுருவுமாவீர்”
மிக்கவுவகையொடு முனிவன்கொண்டிடவும் மின்னும்வானிருந்தே
தக்கதேவர்மலர் தரையுதிர்த்தனர் ,தருமம்காக்கச்சென்ருர்
—நகரவர் அழகுநோக்கிநின்ருர். 108

வாய்மைதூய்மையும் வகுத்ததருமம்பின் வழிக்கொள்வதுபோன்றே
பய்மையோட்டப் பலவாளிகளுடன்வில் பெருமையாகக் கொண்டார்
சய்களறுமுகன் கணபதிதொடரவும் செல்லும்சங்கரன்போல்
போய்வரவிடைகொண் டேகினன்முனியும் பொங்குமுவகையுடனே. 109

அன்றுமாலேவந் தனுகுமுன்னரே
சென்றுசரயுவைச் சேர்ந்துமூவரும்
நின்றுமாலேசெயும் நியமம்செய்தபின்
ஒன்றுகூறுவன் ஒப்பில்முனிவனும். 110

" கானின்வெப்பமும் காற்றுமுங்களது
மேனிமென்மையின் மெருகுலர்த்திடும்
ஊணின்வேற்றுமை யுடல்தளர்த்திடும்
பேணும்விஞ்சையிவை பெறுவி "ரென்றனன். 111

மக்களிருவரும் மனம்செழிக்கமுனி
அக்கணம்பலையோ டதிபலையெனுமிரு
தக்கமந்திரம் தந்திடவவரும்
சிக்கல்நீங்கியவை சிந்தைகொண்டனர்.—ஸ்ரீராம் 112

இருவர்சிடராய் இருடிகளிக்கப்
பரிவுகொண்டுபல பணிகள்செய்திடச்
சரயுமேட்டினில் சாய்ந்துறங்கினர். —ஸ்ரீராம் 113

ஞாலம்செய்தமுனி ஞாயிறெழும்முன்
" மேலையுள்ளபணி மேவிச்செய்திடச்
சீலக்கோசலை சிறுவ! சிங்கமே!
காலைமேவியது கண்விழித்திடாய்." —ஸ்ரீராம் 114

என்றுகூறிமுனி எழுப்பிமைந்தரை
அன்றுமனத்தே ஆனந்தித்தனன்.—ஸ்ரீராம ராமா 115



## அத்தியாயம்—11

ராகம் - மாயாமாளவகௌளம்.

[குமரர்கள் முனிவருடன் மதனுச்ரமம் சேர்ந்து, இரவு தங்கி மேற்செல்ல ஓர் பாலை குறுக்கிட, அச்சூழ்நிலையையும் தாடகையின் வரலாற்றையும் முனிவர் கூறல்]

அன்றுகாலைவர அவர்களெழுந்தபின் அருக்கியமொடுபலவாய்
நின்றுவழிபடல் நிகழ்த்தியபின்னர் நீண்டசரயுவழியே
சென்றுமாலைவர செழித்தசரயுநீர் சேரக்கங்கைகண்டார்
தென்றல்வீசிமனத் தெளிவையூட்டுமொரு தெய்வச்சோலைகண்டார்
நடுவிலோர்—யாகசாலைகண்டார். 116

அழகொடுசாந்தியை யள்ளிவீசுமவ் வாச்சிரமம்கண்டே
அழகன்ராமனதன் விவரம்கேட்கமுனி யன்றுகூறலானுன்
பிழையிலாதமொரு தவமதையாங்கே பிஞ்ஞகன் முன்செயவும்
அழகிணுவம் கொண்டுவனங்கன் அவனைவரட்டலானுன்
சிவனைக்—கோபமூட்டலானுன். 117

முக்கண்ணனும்பின் முனிந்துநோக்கவும் முறையிலா வனங்கன்
அக்கணமே தனை யக்கினிசூழவும் அங்கம்வெந்துபோனன்
ஒக்கவன்றுவிந் நாடுஅங்கமென் றேங்குபெயர்பெறவும்
மக்களிதனைமா முனிவர்வாழும்நல் மதனுச்ரமமென்பார். 118

என்றுமுனிவன்கதை சொல்லிமுடியுமுன் னெதிர்வந்திருடிகளும்
நின்றுபற்பலவும் வாழ்த்துவரவுகளை நியமமோடுசெய்தார்
அன்றிரவினிலிவர் ஆங்குளமுனிவர்தம் அன்புகண்டு வியந்தே
சென்றுகாலைவர கங்கையக்கரை சேரப்புறப்பட்டார்
முனிவர்கள்—ஓடம்திட்டமிட்டார். 119

கங்கைகடந்திடு மிடையேநீரொலி காதில்விழுந்திடவும்
அங்கதன்காரணம் வினவராமன்முனி யதனைக்கூறலானன்
பங்கயத்தான்மனம் பயந்தநீரதே பாய்ந்திடும்சரயூவாய்
மங்களமானவிக்கங்கை சேர்வதம் மாபெருசத்தமென்ருர்
நினைப்பினும்—வரும் பரிசுத்தமென்ருர். 120

தெய்வக்குமரரொடு மாமுனியாற்றின் தென்கரை சேர்ந்தன்றே
மெய்வருத்தமொன் றிலராய்மூவரும் மேலும்நடக்கலானுர்
பொய்யைமெய்யதாய்ப் புனைந்துபேசுபவர் புவியில்வாழுமில்போல்
பையச்செல்லுமவர் வழியில்தீவிசும் பாலைக்கானம் கண்டார்
செல்லும்—வழியில் வெப்பமுண்டார். 121

ஆர்ந்தைகூளியொடு கோட்டான்பலவாய் அலறும்சத்தமுடனே
சோர்ந்துநீர்வேண்டும் சிங்கம்புலிகரடி சோகக்கூச்சல்கேட்டார்
காந்துமவ்வனம் காரணமதனைக் காகுத்தனும் கேட்டான்
சேர்ந்தவ்வனமதில் தாடகைவாழ்ந்திடும் சேதிமுனிவன்சொல்வான்
ரகுராமன்—இதயம்வெல்வான். 122

பிரமன்தந்த தோர்வரமதனுல்
பிறந்தனள்தாடகை யட்சனிடம்
உலவித்திரியுமத் தாடகையால்
உயிருடனிவ்வனம் உலர்வதுகாண். —ஸ்ரீராம் 123

சுகேதுவென்பான் மகளவளாம்
சுந்தனைத்தேடி மணந்திட்டாள்
மகாமாய மூளமாரிசன்
மங்கையிவட்கோர் மகனுவான். —ஸ்ரீராம் 124

முன்னொருநாள் குறுமுனிவர்க்கே
இன்னல்செய்தனர் இறுமாப்பால்
அன்னவர்சாபம் அடைந்திவர்கள்
மன்னுமரக்கராய் மாறினர்காண். —ஸ்ரீராம் 125

உலகமதற்கே உற்பாதம்
விளைவித்தேயிவள் திரிகின்ருள். —ஸ்ரீராம் 126

ஆயிரம்யானை பலமதனை
அடைந்தனள் மலரோன்வரமதனுல்
பேயிவளாம் அறம்வளர்த்திட்டே
பெருமையுறுபவர்க் கிவ்வுலகில். —ஸ்ரீராம் 127

தழைத்திடத்தருமம் தாடகையை
ஒழிப்பதுமுதலாம் உன்கடமை
மக்கள்காக்குமோர் மன்னவன்நீ
தக்கவாறிவளைத் தண்டிப்பாய். —ஸ்ரீராம் 128

பெண்ணென யிவளை எண்ணுதே
புண்ணியமோட்டு வென்னேவல்
தொந்தரவுற்றவவ் விந்திரனுல்
மந்தரையோர்பெண் மாண்டளள்காண். —ஸ்ரீராம் 129

மாதவனுல்முன் கியாதியெனும்
மாதவள்மாண்டதை மனம்கொள்வாய். —ஸ்ரீராம் 130

---

## அத்தியாயம்—12.

ராகம் - சாமா.

[தாடகை வதம்]

இக்கதை நிகழ்ச்சிகேட் டிசைந்துராகவன்
தக்கவாறு நின்றுமுனிவன் தாள்பணிந்தனன்
"சிக்கல்நீக்கு முமதுஏவல் செய்வதெம்கடன்
ஒக்கவெங்கள் தந்தையும் ஈதோதியுள்ளனர் 131

வினயமோடு முனிவன்தன்னை வேண்டிராகவன்
வனமழிக்கும் யட்சியன்று வாழ்வதெங்கென்ருன்
மனமறிந்தகோசிகன் மகிழ்ந்து சொல்லுவான்
"உனையெதிர்த்தோர் நாழியில் அவ்வுருவம்காணுவாய்". 132

ஆணவத்துடன் துடிக்கு மழக னக்கணம்
பூணும்வில் வளைத்துநாணைப் பூட்டித்தட்டினன்
வானமே பிளந்துமண்ணில் விழ்ந்ததென்றரோ !
காணும்குன்றும் மலையுமன்று கலகலத்தவே. 133

அசனியோசை கேட்டநாகம் அலறுமாறுபெண்
விசனமற்ற வாழ்வில்பூசல் விளைவுகண்டனள்
தசைகொழுத்த ஊன்புசிக்க தாகம்கொண்டனள்
விசையெழுந்த புயல்கிளப்பி விரைவில்வந்தனள். 134

சூழ்ந்தெழுந்த கரியஉருவைச் சுந்தரன்கண்டே
ஆழ்ந்துநோக்கிப் பின்னவன் அறிந்திடச்சொல்வான்
"வாழ்ந்துநின்று அறமொழிக்கும் வாளரக்கியோர்
தாழ்ந்தபெண் ! என்றாலும்வலிவு தாங்கிநிற்கிறாள்." 135

கையுயர்த்திச் "சிறுவ"ரென்று கணையமேல்விழும்
மையரக்கிவிலக முனிவன் மந்திரித்தனன்
"தையலெ"ன்றி லக்குவன் தெறித்தவம்பினால்
மெய்யில்காது மூக்கொழிந்து மேலெழுந்தனள். 136

மண்கிளப்பி கற்கள்தூவி மாயமானபோர்
பெண்கிளப்ப, ராகவன் பெயர்த்தவாளியவ்
விண்மறைத்துக் காத்துப்பின் விரைந்துசென்றுமேல்
பெண்படைத்த நீண்டகை பெயர்த்திவீழ்த்திற்றே! 137

கூச்சலோடு வான்கிளம்பி கோரத்தாண்டவம்
மூச்சிலாது செய்தனள் முனிந்த தாடகை
ஆச்சு, மாலைவந்ததென் றறிந்தமாதவன்—தன்
வாய்ச்சொலா லவ்வழகன்கொண்ட வலிவையூக்கினன். 138

"நாணம்கொள்ளு துந்தன்வீரம் நாரியென்பதால்
பேணும்பெற்றி காண்கிறாயப் பேய்மைகாண்கிலை
கோணும்மாலை செல்லவலிவு கொள்வரென்றறி
ஆணும்பெண்ணும் பார்ப்பரோ அதர்மம்செய்திடில்." 139

தவசி சொல்லைக் கேட்டு ராகவன்
தலைநிமிர்த்தி வானில் கண்டனன்
அவள் சுழன்று வான்மறைத்து நின்
றலறிச்செய்யு மாரவாரமே!

—ஸ்ரீராம் 140

"பிணங்கிவான் மறைந்தவப் பிசாசு தன்னையோர்
இணங்குசத் தவேதிவிட் டிழுத்து வந்துபின்
வணங்கவில் லிராகவன்வளைத்த வாளிசென்
றணங்கின்மார்பு புக்குமேல கன்று போயதே
—ஸ்ரீராம ராம ராம். 141

## அத்தியாயம்—13.

ராகம் - ஸிம்மேந்திர மத்யமம்

[தாடகா வதம் கண்டு மகிழ்ந்த அமரர் இந்திரனை முன்னிட்டு வந்து முனிவரை ராமலக்ஷ்மணர்களுக்கு எல்லா அஸ்திரங்களையும் அருளுமாறு வேண்டல்—அன்றிரவு விசுவாமித்திரர் சிறுவர்களுடன் அவ்வனத்தே தங்கி மறுநாட்காலை எல்லா அஸ்திரங்களையும் சிறுவர்கட்குபதேசித்து மேல் சித்தாச்சிரமத்தை யடைதல்]

மலையது கொண்டோர் உதிரஊற்றிடை மண்ணில் வீழ்வதே போல்
தலைவன் செய்தவக் கன்னிப்போரில் பெருந் தாடகை வீழ்ந்திட்டாள்
குலைவிலாதவரம் கொண்டுளவரக்கர் கூட்டமோடு பின்னாள்
தொலைவதற்கதோர் தொடக்கமென்றமரர் தொழுதுவானில் வந்தார்
ராகவன்—வலிவு கண் டுவந்தார். 142

வந்தவிந்திரன் தேவர்கள்வீரனை வாழ்த்தி யாசி சொன்னார்
தந்தை போன்றவத் தவமுனிதன்னைத் தாள்பணிந்து சொல்வார்
"மந்திரமுடனெழும் மாபெருவாளிகள் மனமுவந்து முனிநீர்
தந்துராகவனை யூக்கவேண்டுமுள தருமம் காக்க" வென்றார்
முனியர்—கருமம் நோக்கி நின்றார். 143

இன்னல் வீழ்ந்தவத் தாடகைவனமதன் எழிலைக்காண வானில்
மின்னுவாயிரம் மீன்கள் சூழவான் மீதில் மதியமுற்றான்
தன்னலமில்லாத் தாபதரவ்வனம் தங்குவதிர வென்றே
எண்ணித்திட்டமிட மூவருமிரவை ஏக்கம் நீக்கிக்கழித்தார்
காலையில்—தூக்கம் போக்கி விழித்தார். 144

சந்திசெய்து காலையைக் கண்டார்
மனமும் உடலும் தூய்மையைக் கொண்டார்
மந்திரங்கள் முனிவரும் விண்டார்
வினவிராமன் அவைகள் கைக் கொண்டான். 145

கோதற வுணர்ந்தமுனி ஓதிடவும் ராமனவை ஆதவனிகர்த்த வறிவால்
மிக்கவலி யுள்ளபல சக்கரமெ னத்திகழு மெய்க்கலனி வைகளறிவான்
பிதியுலகங்கொளுநல் லாதியனளித்தபெருஞ் சோதியெனும்தர்மத்திகிரி
அக்கினியைக் கக்கவதில் சிக்கு முலகங்கருகு மண்ட முணர்
காலதண்டம். 146

பாதலம்பிளக்கவல மோதக மொடுச்சிகரி காதிமகன் தந்தகதைகள்
கட்கமுடனுர்த்தியெனும் கன்மலைபொடிக்கவல காலன்கண்டஞ்சுமிடிகள்
ஆதரவுடன்தரும காலமெனும் பாசமிவை அழகனுக்கன்றளித்தார்
தக்கபலசக்திகளும் மிக்குளபலத்திறமும் அக்கணமறிந்து நின்றார். 147

வானமெழும் அழலுடன் வாளியிவை கக்கிபுகை வந்தழக னடிபணிதலும்
இப்பொழுது சென்றுமென் வைப்பென விருக்கவெனச் செப்பியவன்
செங்கை தொட்டான்
ஞானமுனி தந்தவிவை நாயகன றிந்துமனம் நல்லழகு கொண்டு மவரை
ஒப்பவொரு சோதியென அப்புறமவர் செலவு மெய்க்குரு வெனத்
தொடர்ந்தார். 148

காதமிரண்டே செல்லவவ்வனம் கழியக் காணும் சோலை
மாதவருளம்போல் தூய்மைத்தன்மைகள் மலிந்துநிற்கக் கண்டார்
போதலர்ந்தபல மலரொடு புட்கள் பொலியமான்களுடனே
நாதம்கூட்டக் குயில் நடனமாடுமயில் நாயகன் கண்டிடுவான்
மன—உவகையும் கொண்டிடுவான். 149

அந்தவனத்தின் வரலாறதனை யறியராமன் முனியை
"சொந்தமானஉம் ஆச்ரமமெதுவெனச் சொல்லவேணு" மென்றார்
விந்தையானபல அரக்கர்மேவியவ் வேள்வி கலைப்பதுவும்
எந்தச் சோலையதைக் காட்டி பணியெனக்கேவவேணுமென்றார்
முனியுமவன்—மேதை கண்டு நின்றான். 1 0

உள்ளம்குளிர்ந்தே முனிவன் ராகவனுக்குற்ற சோலை யதுவே
கொள்ளவந்தவிடம் என்றுகாச்யபர் கதையைக் கூறலானார்
"பிள்ளையாகவிவ் வுலகமுதல்வன் பேரரியைப் பெறவே
கள்ளமற்றதொரு தவமதனலவன் கண்டசித்தி இங்கே
எனதுநிலை—கொண்டவாச மிங்கே." 151



## அத்தியாயம்—14.

ராகம் - ஸ்ரீரஞ்சனி.

[சித்தாஸ்ரம வரலாறும், குமரர்களுடன் முனிவன் அவ்வாசிரமம் அடைதலும்]

காசிபர் செய்த தவமதைநாரணன் கண்டுமகிழ்ந்து களிப்புடனே
வாசவனுக்கொரு தம்பியெனவே தான்வந்து பிறந்தானதிதியிடம். 152

அன்றுவீரத்தினுல் மாவலியென்பவன் ஆட்சிசெய்து நின்ருன் மூவுலகும்
சென்றுதேவர்களம் மாலைப்பணிந்தவன் செருக்கடக்கிட வேண்டி நின்ருர். 153

உலகம்வியந்திட மாவலியன்ருெரு உன்னத வேள்வி நிகழ்த்திடவும்
பலகலைகற்றவர் மற்றவர் யாசகர் பரிவுடனுங்கொரு கூட்டமானுர். 154

வாங்கிடயாசகம் நாரணனும்தன்னை வாமனனுக வகுத்துச்சென்ருர்
தாங்கிடுமுப்புரி நூலில் மறைந்துள தாமரையாளையும் வெள்ளி கண்டான். 155

சூழ்ச்சியென்றே கண்டு மாவலியையந்தச் சுக்கிரன்சொல்லித்தன் கண்ணிழந்தான்
ஆட்சிகொண்டுநின்ற மாவலியண்ணலுக் களித்தனன்யாதுகொல் வேணுமென்ருன். 156

மூவடியுந்தன்மண் வேணுமென்னப்பலி முறுவல்கொண்டின்றே யளந்திடென்ருர்
தாவியுலகம்வான் ஈரடிசெல்லவும் தலைகொண்டுயர்ந்தனன் மற்ருெருதாள். 157

என்றுகதைசொல்லி யண்ணலுக்கம்முனி எதிருளவாசிர மம்தனக்கே
எந்தனுக்குள்ளவவ் வெல்லாஉரிமையும் உந்தனுக்கென்றே வரவேற்ருன். 158

கூடியெதிர்வந்த முனிவர்களெல்லோரும் கோசிகன் தாளைப் பணிந்து பின்னர்
நாடியுடன்வந்த நம்பிக்கும்தம்பிக்கும் நல்லவாதித்தங்கள் செய்திடுவார். 159

நின்றுபணிந்து முனிவனை ராகவன் நீங்கள்தொடங்குமவ் வேள்விதன்னை
என்றுதுவங்கினு முங்களாசிகொண்டு இன்னல்துடைப்ப
னெழுகவென்ருன். 160

மக்கனை மாமுனி யுச்சிமோந்துநின்று மறுதினம்யாகம் துவங்கு மென்ருர்
தக்கபடியுப சரிக்கப்பட்டவர் தங்கியிரவைக் கழித்திடுவார்.
—ஸ்ரீ ராம். 161

---

## அத்தியாயம்—15.

### ராகம் - ஜெயந்தஸ்ரீ.

### [விசுவாமித்திரர் யாக ஸம்ரக்ஷணம்]

காலை தோன்றுமுன் கண்விழித்தழகன் கடன்கள் செய்து பின்னர்
சிலமோடுநின் ருங்குளமுனிவர்கள் செய்யும் வேள்வி கண்டான்
மேலையுள்ளபணி கேட்கராகவன் மேதைமிக்க முனிவர்
நாலுமிரண்டே வேள்விசெய்திடும் நாட்களென்று சொன்னர்
—ஜெய் ராம ராம ராமா. 162

" ஆறுநாட்களப் பகலுமிரவுமிதை ஆதரித்து நீங்கள்
சோர்விலாது வரும் இன்னல்நீக்கியெம் சோகம்போக்கு" மென்ருர்
கூறியவவர்மொழி ஆக்கினையாகக் கொண்டு களிப்புடனே
நேரிளையவனைக் கூட்டித்துணைகொண்டு நேர்த்தியாகக் காத்தார்
யாகப்—பூர்த்தி காணப் பார்த்தார். 163

ஐந்துநாட்களும் மைந்தரிருவரும் அயர்விலாது நின்ருர்
வந்துமேகம்வான் படர்ந்துகறுத்தவ் வகுத்தவெல்லை நாளில்
அந்தவேளை ஸ்ரீ ராமனிளையவனை அண்டிமெய்ச்சரித்தே
மந்தைமந்தயா யரக்கர்கூட்டம்வான் மறைத்தகாட்சி கண்டான்
உற்றபோ—ருரைத்து ஆட்சி கொண்டான். 164

மின்னுமெயிறுடன் இடியொலிசெய்தே மேனிகறுத்தவராய்
கன்னல்விசும்விழி சுழற்றுமிருவரைக் காளைராமன் கண்டான்
அன்னவரேமுனி சொன்னவிருவர்மாரீசன் சுபாகுவென
உன்னிராகவன் உளம்மகிழ்ந்துவில் உவந்து கையெடுத்தான்
இளையவன்—சிவந்து மெய்துடித்தான். 165

மலரொடுகந்தம் மந்திரவரிசிபுல்
பொலியும் வேள்வியைப் பொங்கியரக்கர்
குலையக் குருதியுள குடங்கள் வீசவும்
தலைவன் விட்டசரம் தடுத்துக் காத்ததே
—ஸ்ரீராம ராமா. 166

மானவமெனுமோர் மாபெருமத்திரம் மகிழ்ந்து ராமன் கொண்டே
வானெறிந்துதன் இளையனுக்கதன் வலிலவக் கூறலானுன்
போனவாளியச் சுபாகுவுயிரைப்போக்கிவீழ்த்தி நொடியில்
ஊனமானமா ரீசனை யோசனை உலறஓட்டிற் றன்றே
கடலுள்—அலறக் கூட்டிச் சென்றே. 167

எஞ்சியுள்ளபேரரக்கர் யாவரும் எடுக்க ஓட்டமன்றே
விஞ்சைகூட்டிக்கால் வீசும் வாளியை வீரன் விட்டுநின்ருன்
பஞ்சையரக்கரும் பகலவன் தன்னைப்பார்த்த பனிமலைபோல்
அஞ்சியோடச்சிலர் அலறிமாளப்பலர் அங்கம் வெந்து விழ்ந்தார்
வானவர்—சங்கமூதி வாழ்ந்தார். 168

பரக்கவானிருந் தமரர் மலர்களால் பந்தல் வேய்ந்து நின்ருர்
நெருக்க வானிலவர் வந்துசிறுவர்தம் நேர்த்திகண்டு நின்ருர்
அரக்கர் தொல்லையன் றழியமாமுனிவர் ஆக்கும் வேள்வியதனை
சிறக்க முடித்தே யாசிக்கூறிப்பின் சிறுவரை வாழ்த்திட்டார்
உலகுள—இன்னலை வீழ்த்திட்டார். 169

"அருமையான வென் வேள்விகாத்துநீ அமரவாழ்வு தந்தாய்
குருவின்வாசகம் கொண்டுநடந்தாய் குவலயம் போற்றிடவே
பெருமையானவிச் சித்தாஸ்ரமமெனும் பேருமுண்மை செய்தாய்
சிறுமைதேயவிச் செகமதனைநீ செழிக்கச் செய்யவந்தாய்
பே—ரின்பமின்று தந்தாய்" 170

என்றுபலப்பல புகழ்ந்துமக்களுக் கேற்ற வாசிதந்தார்
அன்று வந்தவவ் விரவைமுனிவர்கள் அழகனேடு கழித்தார்
சென்றுகாலைவர செயல்முடித்துப்பின் சேர்ந்துமுனியைராமன்
நின்றுமேலுமுள பணிகளையந்நாள் "நியமித்திடு" மென்ருன்
பய—பக்திகொண்டு நின்ருன். 171

வேள்வியொன்றதை மிதிலையில் சனகன் வேண்டிச் செய்வதாகக்
கேள்வியுற்றனம் நாமுமின்றதற் கேகவேண்டு மென்ருர்
தோள்வலி கொண்டார் எவரும் கண்டதைத் தொடவுமஞ்சும் வில்லொன்
ருள்பவனிடமுள ததனைநீவிரும் அறிய வேணுமென்ருர்
ஆங்கே—சென்று காண்ப மென்ருர். 172

சித்திகண்டவவ் வாச்ரமமதனைச் சீடர்களுடன் முனியும்
அத்தினமே விட்டேக திட்டமிட் டழகனேடு சென்ருர்
தத்தையோடு மயில் தங்கிய மான்களும் தந்தை போன்றவவரைச்
சுத்திவந்து விடைகொள்ளவும் வண்டிகள் சூழப்பயணமானுர்
ஸ்ரீ ராம ராம ராம் ராம். 173

## அத்தியாயம்—16.

ராகம்—ஹம்ஸாநந்தி.

[ முனிவர் ராமலக்ஷ்மணருடன் புறப்பட்டு மாலை சோணை நதிக் கரை சேர்தலும், அந்நாட்டு வளப்பத்தைக்கண்ட ராகவன் அதன் பூர்வ கதைகேட்டல் ]

[குசன் வைதர்ப்பி என்பவருக்குக் குசாம்பன், குசநாபன், ஆதூர்த் தரஜஸ், வஸு என்றவ நால்வர் பிள்ளைகளாய்ப் பிறக்க, அந்நால்வரும் ஒவ்வொரு தலைநகரை நிர்மாணித்துத் தர்ம அரசு செய்தலும்—வஸு நிருமித்த கிரிவிரஜம் என்ற தலைநகரிலே உற்பத்தியாகி வரும் சோணை நதி அந்நாட்டை வளமுறச் செய்வதும், குசநாபன்—கிருதாசி என்ப வருக்கு நூறு கன்னியர் பிறப்பதுவும், வாயு அவர்களை மணக்க வேண்ட அவர்கள் மறுத்ததால் அவர்கள் முதுகுகளைக் கூனும்படி யொடித்துத் துன்புறுத்துதலும், குசநாபன் வருந்தி, வேள்வியிற் சிறந்த அந்தணன் சூளியனது வரத்தினுல் அவருககுப் பணிவிடை செய்த சோமதையிடம் தோன்றிய பிரமதத்தர்என்பவருக்கு அந்நூற்று வரை மணம் செய்வித்தலும் — அவர் கைப்பட்டதும் பெண்கள் நூற்று வரும் குருபம்நீங்கி அழகுறுதலும் — பிறகு குசநாபன், புதல்வன் வேண்டி யாகஞ் செய்யத் தனது மூதாதை குசன் தோன்றி வரமளித் தலும்—அவர்கட்குக் காதிபிறத்தலும் அக்காதிக்குத் தானும் சத்தியவதி என்ற தமக்கையும் உதித்தலும், சத்யவதி ரிசிகரை மணந்து சிலநாட் களின்பின் அவர் மறைதலும் சத்யவதி இமயத்தினின்று ஓர் நதி யாய்ப்பாய்ந்து உலகைப் பாவனம் செய்திடலும், முனிவர் அவள் பிறக்கும் இமயத்திலேயே வாசம் செய்வதும்—ஆகிய இவை கூறுதல் ]

சாலையோடுமக் காட்டுவழியிலே சலிப்பிலாது சென்றூர்
மாலைவந்திடவும் சோணைநதிகண்டு மகிழ்ச்சியோடு நின்றூர்
சீலமுனிவனும் சிறுவர்களுடனே செபதபம் செய்திட்டான்
சோலைநாட்டுவளம் கண்டுராமன் "கதை சொல்லவேணு" மென்றூன்
முனிவனும்—நல்லதென்று சொல்வான். 174

எனதுமூதாதை கதையிதுராமா இசைந்துகேட்க லானுய்
முனமொருநாள்குச னென்றமுனிவனை மூவுலகும்அறியும்
மனைவியளாய் வைதர்ப்பியென்பவளை மணந்துவாழ்வுகண்டார்
தனயர்பெற்றனர் நால்வர்ஆற்றலுடன் தருமம்கற்றுநின்றூர். 175

குசாம்பனுடனே யதூர்த்தரஜஸும் குசநாபன் பின்னல்
வஸுவென நால்வரும் சத்தியநன்னெறி வாழ்க்கைகொண்டு நின்றூர்
விசாலமானவிப் பூதலமறமே விளங்கஆட்சி கொண்டார்
குசாம்பனுதிய நால்வரும் தலைநகர் கோண்டுநாட்டை யாண்டார்
தருமம்—நின்றுபுகழில் நீண்டார். 176

கிரிவிரசமெனும் வசுவின்தலைநகர் கிளம்பியிந்த சோணை
வருநதியாகும் மகதமிந்நகர் வளமுறவைத்ததுவே
பெருமைபெற்றவக் குசநாபன்மனை பெண்கிருதாசியிடம்
அருமையாகப்பெண் நூற்றுவர்தம்மை அடைந்துஇன்பமுற்றார். 177

தேவகன்னியர் போலநூற்றுவர் தேடிச்சோலை யோர்நாள்
ஆவிகளித்தே யாடிப்பாடிடவும் அதனைவாயு கண்டான்
"தேவியராய்நீர் நூற்றுவரும் எமைத்தேற்ற வாரு"மென்றான்
"ஆவதாயினது அன்னை தந்தையின் அனுமதிகொளு" மென்றார். 178

முனிந்துகாற்றிறை நாரியரவரை முடக்கித்துன்பம் செய்தான்
சினந்துதந்தையிட முடல்நலிந்தவர் செய்தியுரைத்திடவும்
கனிந்தெழுந்தவச் சீற்றம்தடுத்தே கன்னியர் தமைத்தேற்றி
நினைந்திடாது வித்தருமமற்றசெயல் நீதியற்றதென்றான்
அரக்கரின்—சாதியுற்றதென்றான். 179

அன்றுவேள்வியில் அளவிலாப்புகழ் அடைந்தசூளி முனிக்கே
நின்றுபணிவிடை செய்தசோமதை நிலைத்தவரம் கொண்டாள்
குன்றிடாதபுகழ் பிரமதத்தனவள் குமரனாய்ப்பிறந்தே
அன்றுகாபில்யம் அழகுநாட்டதை ஆண்டு புகழ்கொண்டான்
தருமம்—பூண்டு திகழ்ந்திட்டான். 180

பிரமதத்தரைக் கொண்டு குசநாபன் பெண்கள் மணம்கண்டான்
கரமதாலிவர் தீண்டிய கணமே கன்னியர் நூற்றுவரும்
பெருமைபெற்றுத்தம் பேரழகுடனே பிணிகள்நீங்கி நின்றார்
அறமதோடுபின் னழகுநூற்றுவரும் அவரொடுவாழ்ந்திட்டார்
பெற்றோ—ரிருவரும் மகிழ்ந்திட்டார். 181

வேள்வியொன்றைக் குசநாபன் புதல்வர்கொள வேண்டிச்செய்ய வன்றே
ஆள்வதற்குவழி யருளக் குசன்தோன்றி, அவர்க்குக்காதியுற்றான்
தாள்வழிவந்தவன் கோசிகனெனும்யான் தமக்கையாகஎனக்கே
நீள்புகழ் சத்தியவதி ரிசீகனுடன் நின்று சொர்க்கம் சென்றாள்
நதியா—யின்றிவ் வுலகு நின்றாள்.
ஸ்ரீ ராம ராம ராமா 182



## அத்தியாயம்—17.

### ராகம்—ஆநந்தபைரவி.

### [குமாரஸம்பவம்]

உடன்பிறந்தவள் உதிக்குமிமயமதில் உவந்தென் வாசங்கொண்டேன்
தடங்கல்நீக்கிநீ காத்தவேள்விசெயத் தங்கியிங்கு நின்றேன்
தொடங்கிச்சொன்னவிது நாட்டுக்கதையுடன் தொன்மையெந்தன்வம்சம்
அடங்கிடப்புவிசிசி யண்டியதிந்நாள் அழக! சென்றுறங்காய்
கோசலைக்—குழக! சென்று றங்காய். 183

இரவில்நிசிவரை இசைந்துகேட்டுக் கதை
துறவிகளுடனிவர் தூங்கச் சென்றனர்
விரைவில்காலைவர விழித்தியாவரும்
குறைவிலாதுகடன் குளித்துச்செய்தனர்
ராம ராம ராமா. 184

அன்றுபயணமாய் அழகனுேடினையன்
நின்றுமுனிவர்களும் நீண்டவழியெலாம்
சென்றுகங்கைநதி சேரக்கண்டனர்
தென்றலோடுநீர் தெளிந்தலூட்டமே
ராம ராம ராமா. 185

கங்கையாடிப்பிதுர் கடன்கள்தேவர்கட்(கு)
அங்குச்செய்தனர் அவர்கள்கூடிப்பின்
தங்கக்கோசிகனைத் தயரதன்செல்வன்
மங்களமூட்டுமக் கங்கைவரலாற்றைச்

சொல்லவேணுமென்ருன்—முனிவனும்
நல்லதென்று சொல்வான். 186

இமவானெனும்மலை யரசனிடம் - தமக்
கிணையிலாவழகர் இருபெண்கள்
உமையவள்முன்னிக் கங்கையெனும்தவ
உத்தமிதோன்றி உயர்ந்தனள் காண். 187

தேவர்கள்உலகின் நன்மையதைத்— தினம்
தேடிக்கங்கையை மூவுலகும்
பாவனம்செய்திட ஓர்நதியாய்—அவள்
பாயவேண்டினர் பணியேற்ருள். 188

தவமதையூன்றித் தான்செய்தாள் — உமை
சிவனைமணந்தாள் சீர்பெற்றுள்
உவகையுற்றவச் சிவனிடமே — ஓர்
மகவைவேண்டினர் தேவர்களே. 189

பரமசிவன்தன் உரமதுவே — புவி
பாய்ந்திடவந்நாள் அக்கினியாய்
சரவணமெனுமிக் கங்கையிடை — அவ்
வறுமுகன்தோன்றி வளர்ந்திட்டான்
ராம ராம ராமா. 190

தேவர்சேனைகட் கதிபதியாய் — அவர்க்
காவனசெய்தான் அருள்தந்தே
பூவுலகோர்தமைப் போற்றிடலின் — றவர்
தேவைகள்தந்து திகழ்கின்றான்
ராம ராம ராமா. 191

---

## அத்தியாயம்—18.

ராகம்—ஹம்ஸத்வனி.

[ சகர மன்னன் கதை ]

கதையைக்கேட்டஸ்ரீ ராமன்முனிவனைக் கங்கைபாயும் விவரம்
அதனைக்கேட்கவும் கௌசிகனந்நாள் அகமகிழ்ந்து சொல்வான்
நிதியும்வீரமும் நிலைத்தகீர்த்தியொடு நினதுதாதையொருவன்
பதியுமாகியுல காண்டனன்முந்நாள் பார்த்திபன் சகரனவன்
மிகக்—கீர்த்தியின் சிகரமவன். 192

கேசினியெனும்தன் மனைவிமகவொன்று கேட்கச் சகரமன்னன்
காசிபர்தம்பெண் சுமதியென்பவளைக் காதலொடு மணந்தான்
மாசிலாததவம் இமயம்சென்றவன் மனைவியரொடு செய்தான்
ஆசிசெய்தனன் ப்ருகுவெனு மிருடியும் அவர்க்குத் தோன்றியன்றே
பல—மக்கள் வாய்ப்பரென்றே. 193

முன்னவள்கேசினி யவனருள்தன்னால் முதல்மக வசமஞ்சன்
தன்னையீன்றிடவும் அறுபதினாயிரம் தனையர் சுமதி தந்தாள்
பின்னையசமஞ்சன் நீதிநவறிப்பல பிழைகள் செய்யவவனை
அந்நகரமாந்தர் வெறுத்தனரவனுக் கம்சுமா னுதித்தான்
பிறருமவன்—தன்மை கண்டு மதித்தார். 194

நாட்கள்செல்லவச் சகரமன்னவன் நாடிச்செய்ய வேள்வி
வேட்கைகொண்டனன் குருவின்விடையுடன் வேண்டுவனவும் செய்தான்
ஆட்கள்சூழத்தனை யம்சுமான்யாக அசுவம்காத்துச் சென்ருன்
கேட்டவிந்திரன் வந்துகோபமொடு கேடுதேட லானுன்
குதிரையைத்—திருடியோட லானுன். 195

வேள்வியசுவமதை யிழந்துமன்னவன் வேதனைமிகக் கொண்டான்
கேள்விகல்வியில் பெரியவரதுமிகக் கேடுசெய்யு மென்ருர்
தோள்வலியுளதம் அறுபதினுயிரம் தோன்றலவர் தம்மை
நீள்புவியெங்கும் குதிரைதேடிவர நிலைத்தஏவலிட்டார்
புவியையவர்—குலைத்துக் கூவலிட்டார். 196

நாவலந்திவில் குதிரையெங்குமவர் நாடிக் கண்டிடாமல்
பூவுலகதனைக் கீண்டுயோசனை புரட்டித்தேடலானுர்
மேவியின்னலங் நிலமுளோர்களும் மெலிவுறும் நிலமாதும்
ஆவனசெய்யவப் பிரமன்தன்னையே யண்டிவேண்டி நின்ருர்
பிரமனதி—லுண்டு நன்மை யென்ருன். 197

மேதினி தோண்டியு மசுவம் காணுது மேலும் தேடலானுர்
பாதலம் சுமந்திடும் திக்கயங்கள் கால் பறித்துத்தேடலானுர்
வேதனைதீர்ந்திட முனிவர் கபிலர்முன் வேள்வித்துரகம்கண்டார்
"சோதனையாயிம் முனிவர்செய்த பெருஞ்சூழ்ச்சி" யென்றுசொன்னுர்
கபிலரைத்—தாழ்ச்சிசெய்து நின்ருர். 198

மந்துனைத்தவவ் வறுபதினுயிரம் மக்கள்கூடி யன்றே
துன்புறுத்தவம் முனிவன்பார்வையால் துஞ்சிச்சாம்ப ரானுர்
எண்ணிச்சகரனிவர் வரவுகாணுது யேங்கி யம்சுமானை
புண்ணியங்காக்குமவ் வேள்விபூர்த்திசெயப் புரவிதேடச்செய்தான்
அம்சுமான்—விரைவிலோடிச் சென்ருன். 199

தந்தைதந்தைமொழி தாங்கியம்சுமான் தரையில்எங்கும்சென்றே
அந்தமிலாவத் தாதையர் வழியே அயர்விலாது சென்ருன்
வந்துபாதலம் வேள்விகாக்குமவ் வாசிமேயக் கண்டான்
நிந்தைசெய்துஅவன் தந்தையர்வெந்துள நீறு கண்டுநின்ருன்
கண்ணீர்—ஆறுகொண்டு நின்ருன். 200

தாதையர்க்குநீர்க் கடன்செயவெங்கும் தானடைந்திடாமல்
வேதனைகொண்டிட கருடன்தோன்றியவ் விளக்கம் கூறலானுன்
பேதைமையாலிவர் கபிலர்கோபத்தீப் பெற்றுத்தீய்ந்து போனுர்—அதனுல்
பூதலம்கங்கை வந்துதிண்டிடில் புனிதராவ ரென்ருன்
அம்சுமான்—மனத்துக் கொண்டு சென்ருன். 201

ஸ்ரீ ராம ராம ராமா

# அத்தியாயம்—19.

ராகம்—தன்யாசி.

[ கங்கோற்பத்தி ]

குதிரையை யன்றே கொணர்ந்துஅம்சுமான் கொற்றவனிடம் விடவும்
அதனைக்கொண்டவன் வேள்வியினெல்லே அடைந்துமேன்மை யுற்ருன்
சுதர்களானதன் அறுபதினுயிரர் சொக்கம் சேரக் கங்கை
அதனைநினைந்தே முப்பதினுயிரம் ஆண்டுவாழ்ந்து வீழ்ந்தான்
துயரமே—பூண்டு தவம தாழ்ந்தான். 202

முன்னவர்வழியே யம்சுமானும்பல முயற்சிசெய்ய லானுன்
எண்ணியாண்டுகள் எண்ணுன்காயிர மிருந்து மாண்டு போனுன்
அன்னவர் மகனே திலிபனென்பவன் அருமைவேள்வி பலசெய்(து)
என்னவாறு வக்கங்கை கொள்வதென ஏங்கிநின்று வாழ்ந்தான்
தானும்—மிகமுயன்று தாழ்ந்தான். 203

எடுத்தசெய்கையி னிறுதிகாணுது ஏங்கி மாண்ட வவனுக்
கடுத்துவந்தவன் பகீரதனெனும் அரசன்உந்தன் தாதை
கொடுத்துநாட்டைத் தன் மந்திரியரிடம் கோகரணம் சென்றே
பிடித்துத் தவமதை யாண்டுகள் செயவும் பிரமன்தோன்றிச் சொல்வான்
அவனது—துயரம் வீயச் சொல்வான். 204

கங்கைவீழுமவ் வேகம்தாங்காது கரையும்பூமி யதனுல்
பொங்கிவீழுமவ் வேகம் காக்க ஒரு புனிதமாய தவத்தால்
சங்கரனவனைச் சரணடைந்து 'அவன் சக்திவேண்டு'கென்ருன்
பங்கமற்றதொரு தவமதனையுமை பாகன் மெச்சச் செய்தான்
அரனுமவன்—வரமதிச்சை பெய்தான். 205

கங்கைபுவியில்வர பகிரதன்பின்னுமோர் கடுந்தவம் செய்திடவும்
பொங்கிவீழுமப் புவி இருண்டிடவும் பொன்னி தோன்றலானுள்
தங்குமீனுமை அரவு துள்ளவவள் தரையில் வீழுமழகை
எங்கும் தேவர்கள் கண்டுகாட்சியின் எழிலைக்கண்டு நின்ருர்
பரமசிவன்—சடையைக் கொண்டு நின்ருன். 206

அறுகுநுனிமீதில் அமரும் திவலையென அதிர்த்து வந்த கங்கை
பெருகு சிவன்சடை யொன்றிலொளித்தே பெருமைபெற் றுயர்ந்தாள்
பிறகு பகிரதன் வேண்டப்பரமனும் பிரித்துக் கங்கைவிட்டார்
உருகு பனியெனவே யேழ்கிளைகொண்டாள் உவந்துசெல்லலானுள்
அரசன் பின்—தவழ்ந்து செல்லலானுள். 207

வழியில் சன்னுவின் ஆச்ரமமதனை வளைத்து நிற்கக் கருவம்
கழியக் கங்கையை அங்கைகொண்டவர் கடுகென உட்கொண்டார்
பிழையிலாதவப் பகிரதன் வேண்டிடப் பிரித்துச் செவியின்வழியே
நுழைந்துபோகவிட மாதவன் பின்னல் நுரைத்துச்சென்று கீழே
சாம்பரைக்—கரைத்து நின்றுளாளே. 208

சகரமக்களவ் வறுபதினுயிரர் சற்கதி சென்றிடவும்
நிகரிலாதமனத் தூய்மையோடுலகு நின்றுபாய லானுள்
பகர உலகமிவள் பகிரதனுல்வரும் பாகிரதியெனவும்
சகரர் தோண்டியவச் சாகரம்சேர்ந்திடும் சான்னவி இவளென்பார்
பரிசுத்த—மேன்மை தருவளென்பார். 209

பிரமன்தந்தபல வரமொடுநாட்டைப் பிழையிலாது நெடுநாள்
அறநிலைகுன்று தாண்டு வாழ்ந்தனன் அரசனுந்தன் தாதை
நிறைவொடு தூயவிக் கதையைக் கேட்டவர் நிலைத்தவாழ்வு கொள்வார்
குறைவிலாதுபல செல்வ வளமுடன் குணமும் தாங்கி நிற்பார்
பல—வேள்வி யோங்கக் கற்பார். 210

---

## அத்தியாயம்—20.

### ராகம்—அஸாவேரி.

[ திதியாஸ்ரமும் ஸமுத்ரமதன விருத்தாந்தமும் ]

கங்கை பிறந்த கதைகேட்டு ராமன்
பொங்கி மகிழ்ந்திராப் போதைக் கழித்தான்
மங்களக் காலை மறுதினம் கண்டார்
அங்குளோர் ஓடம மைக்கக் கடந்தார். 211

ஆற்றைக் கடந்துபின் அக்கரை சேர்ந்தார்
போற்றற் குரியதோர் பொன்னகர் கண்டார்
விற்றுநல் வேள்விகள் செய்யவு மாங்கோர்
காற்று விசும்குடில் காகுத்தன் கண்டான். 212

அங்கக ரோடுமவ் வாசிர மத்தின்
மன்னு புகழ்கேட்க மாமுனி சொல்வான்
முன்னம் பிணிசாவு மூப்பை விலக்க
எண்ணிச் சுரரோ டசுரர் முனைந்தார். 213

ஆழி கடைந்தா ரமுதத்தை வேண்டித்
தாழியில் மந்தரம் தாழ்த்தினர் மத்தாய்
சூழவவ் வாசுகிச் சுற்றிக் கயிருய்
ஏழிருலகம் எரியக் கடைந்தார். 214

வாசுகி யந்நாள் வலியுடல் நைந்தே
நாசி வழியால காலத்தைக் கக்க
கூசிச் சுரரும்பின் கூடி யசுரர்
பேசிச் சிவன்பாதம் பேணி யடைந்தார். 215

அண்டிய தேவர் அசுரரைக் காக்க
எண்டிசைச் சென்றே எரியும் விடமுட்
கொண்டு சிவன்நீல கண்டனெனப் புகழ்
மண்டவந் தன்றே இம்மாநிலம் காத்தான். 216

ஆல காலவிட மன்று தணிய
மேலுங் கடையவம் மேருவைத் தாங்கக்
கோல வாமையாகிக் கோவிந்தன் வந்தான்
சீலச் சுரரும் சித்தம் மகிழ்ந்தார். 217

தண்டு கமண்டலம் தாங்கித் தன்வந்திரி
உண்டாகப் பின்னர் உலகம் களிக்கப்
பெண்டாக வாயிரம் பேரழ குள்ளோர்
தொண்டுப் பெண்டிர்கொண்டு தோன்றினர் அன்றே. 218

வாருணி தோன்றி வழிக்கொண்டாள் தேவர்
ஊரோர் வியந்திட உச்சைஸ்ரவ மென்னும்
பேர்கொண்ட வாசி பிறந்திட மாலின்
மார்பணி கௌத்துப மணியுட னன்றே. 219

நின்று வானில்முழு நிலவென வங்கு
அன்று கடலில முதம் மிதக்கத்
தின்று வாழ்வுபெறத் தேவ ரசுரர்
கொன்று தம்முள்பூசல் கொண்டு மடிந்தார். 220

மாயப்பெண் ணுயங்கு மாதவன் தோன்றிப்
பாய சுரர்க்கே பகிர்ந்தான முதம்
வீயவ ரக்கர்தம் வீரம் விளக்கப்
போயன்று தேவர் புகழ்பெற்று நின்ருர். 221

மக்கள சுரர் மடியத் திதியன்று
ஒக்கவிந் திரனை ழித்திடப் பிள்ளை
தக்கவரம் பெற்றுத் தாரணி வந்தாள்
மிக்கவேள் விசெய்து மேன்மை யடைந்தாள். 222

இந்த நிகழ்ச்சிக ளிந்திரன் கேட்டான்
வந்து திதியை வழிபட்டு நின்றுன்
நிந்தனை காணும் நிமிடம் கருவே
சிந்தி எழுகூறு சிதைத்துப் பணிந்தான். 223

மருத்துக்கள் ஏழாய் மாறி நிலைக்கத்
திருத்தி யமைத்துத் திதிமனம் நொந்து
பொறுத்து வாசவனைப் போக விடுத்தே
கருத்தினி லின்பங்கள் கண்டது மிங்கே. 224

இந்த நகரம்முன் இட்சுவா குவுன்
தந்தை யலம்புசைத் தாரத்தி டம்வந்த
மைந்தன் விசாலன் மகிழ்ந்து நிறுவிய
விந்தை நகரம் விசாலமி தாகும்.
ராம ராம ராமா. 225

## அத்தியாயம்-21

ராகம்—ரவிசந்திரிகா.

[ குமரர்கள் முனிவரோடு விசால நகரைத் தாண்டி மிதிலையின் எல்லை யையடைதலும் அகலிகை சாபவிமோசனமும் ]

வழிவழியாயக் நாட்டையாண்ட பெருவம்சம் கூறி முனிவன்
அழிவிலாதபுகழ் அரசன் சுமதியதை ஆள்வதென்று சொன்னான்
வழியில் சுமதியும் எதிர்கொண் டவர்களை வந்து பணிந்தாங்கே
பிழையிலாதவக் குமரர்முனிவரைப் பார்த்துவரவு சொன்னான்
உபசார—வார்த்தை பலவும் சொன்னான். 226

மாணவரிருவரின் அழகு மாற்றலோடு மதியும் கண்டு மகிழ்ந்தே
வானவருய்ந்திட வந்துள அவர்வழி வரலாறுகள் கேட்டான்
தானவர்களுடன் இரவிலங்கர் தங்குவதென முனியும்
வானம்சூரியன் வழிக் கொளுமுன்னே வழி நடக்கலானார்
மிதிலையின்—அகழி கடக்கலானார். 227

வரும்வழி சரி நீர்வாருமென மிதிலைவளர்ந்துநின்ற கொடிகள்
நிறம்பலபலவாய் நின்றுகூறியவர் நினைவைக் கவர்ந்தனவே
சிரம் நிமிர்ந்துவான் நிற்கும் மிதிலைமதில் சீரைக்கண்டு சிறுவர்
அறம்வளர்க்கும் முனியழைத்துச் சென்றிடவும் அவரொடுநகர் புக்கார்
இருவரும்—அழகொடு புகழ் மிக்கார். 228

தூய்மை பொலியுமோர் தவச்சாலையுடன் துலங்கும் சோலைகண்டே
வாய்விடுத்துஸ்ரீ ராகவன முனியை வரலாறுகள் கேட்டான்
ஓய்விலாததவக் கௌதமனெடுமுன் ஒளிமிகு மகலிகையும்
வேய்ந்து வாழ்ந்தவத் தவக்குடி லாங்கே வீழ்ந்தகதை சொல்வான்
கௌதமனின்—ஆழ்ந்த நெறியைச் சொல்வான். 229

இந்திரனோர்நாள் காமவேட்கையொடு இழிந்த எண்ணங்கொண்டே
வந்து கோதமனின் வடிவுடனகலிகை வணங்கிநின்று சொல்வான்
"சுந்தரமே! நின் கலவித்தேனதைச் சுவைக்கவந்த" தென்றான்
அந்தவேளை முனி யுருவுகண்டதால் அவளும் இசைந்திட்டாள்
பலநாள்—வசையில் விழுந்திட்டாள். 230

இன்பவெல்லையை இருவரும் கண்டனர் இந்திரனதன் பின்னே
துன்பமூளும்முனி வந்திடில் என்னே! துடித்துச்செல்ல லானான்
பொன்பழிக்குமொளி வேள்வித்தீவீசிப் போனமுனியும் வந்தே
வன்பழிக்குப்பின் இந்திரனோடுமவ் வகையைக்கண்டு நின்றார்
கோபப்—புகையைக் கக்கி நின்றார். 231

பரமசிவன்முன் அனங்கன்பட்டவப் பாடுபட்டு நின்றான்—இந்திரன்
உரமதொழிந்தே அண்டமிரண்டும் ஒழியச்சாபம் பெற்றான்
தரமிழந்துமுன் நிற்குமகலிகையின் தாழ்ச்சிகண்ட முனியும்
நிறமொழிந்துநீ நீள்புவிகல்லாய் நின்று படுவையென்றார்
அவள் பழி—'என்று விடுவதெ' ன்றாள். 232

தோல்வியற்றபுகழ் தயரதன்புதல்வன் தோன்றுமந்த நாளில்
வேல்விழிமானே! உனதுசாபம்போய் வேண்டும் தூய்மை யடைவாய்
கால்வழிபார்ப்பாய் கண்டவுடனவனைக் களித்துப்பூசை செய்வாய்—அந்
நாள்வருமென்றுன் மருங்கு வருவேனென நாடினன் இமயமலை
தவமதில்—கூடினன் ஞானமலை. 233

என்றுகோசிகன் கௌதமன்கதையை எடுத்துச்சொல்ல ராமன்
தென்றல்வீசுமவ் வாச்ரமமதனைத் தேடிச் சேரலானான்
நன்றெனராமன் களித்துமுனியுடன் நாடிச்செல்ல வாங்கோர்
குன்றம்வீழ்ந்ததோர் கல்லவன்அடிபடக் கொண்டது பெண்ணுருவம்
உலகம்—கண்டது பண்ணுருவம். 234

இருள்பிரிந்தெழும் பருதிஎன்றவள் எழுந்து வணங்கிடவும்
அருள்சுரந்துஸ்ரீ ராகவனவளை அன்னையென்று கொண்டான்
மருளொழிந்துஅக் கோதமமுனிவன் மறுகண மாங்குற்றான்
பொருளுணர்ந்தவம் முனிவன்ராகவனைப் போற்றியுப சரித்தான்
அவன்—கீர்த்தி யுலகுரைத்தான். 235

கோதமனகலிகை செய்தபூசைகளைக் கொண்டு குசிகமுனிவன்
வேதகீதமெழும் மிதிலைநகர் ராஜவீதி காணச்சென்றார்
நீதிலாச்சனகன் செய்யும்வேள்வியைத் திரண்ட பொருள்களுடனே
காதலோடுமவ் வூருளமக்கள் காக்கும்தருமம் கண்டார்
இன்பமே—பூக்கப் பெருமைகொண்டார். 236

செல்வவளமெலாம் செழிக்கவான்புகழ் சேர்ந்தமிதிலை யுள்ளே
பல்வளங்களையும் முனிவர்பாலரொடு பார்த்துமன முவந்தார்
சொல்லிழந்துமவ் வூருளமக்கள் சோதியொத்த விவவரைக்
கல்வியெல்லையே காட்சிக்குற்றதெனக் கண்டுமகிழ்ந் திட்டார்
இன்பமே—கொண்டுபுகழ்ந் திட்டார். 237

---

## அத்தியாயம்—22.

**ராகம்—ஸாரமதி.**

**[ மிதிலையில் முனிவரும் குமரர்களும் ]**

கூட்டமற்றதொரு நகரவசதியைக் கொண்டு தங்கமுனிவன்
நாட்டங்கொள்ளவும் சனகமன்னனிவர் நண்ணிவந்த தறிவான்
ஓட்டமாகத்தன் குருவொடுமங்கல ஒலிகள் சூழவந்தே
கூட்டமாகப்பல வந்தணர்மந்திரம் கூறிவரவு சொன்னார்
நகருளோர்—சேரவரவு சொன்னார். 238

வேள்விபலகண்ட சதாநந்தகுரு வேதவிதிகள் வழியே
தாளலம்புநீர் தக்கவாசனமும் தந்துநிற்க வரசன்
வேள்விபூக்கநீர் இன்றுவந்துளது வேந்தனெனது பாக்யம்
நாள்பன்னிரண்டு உளதுதேவர்கள் நாடிவருவ ரென்றான்
சனகன்பல—கோடிவரவு சொன்னான். 239

கோசிகமுனியவ் வரசனேடுசெங் கோலின் சேமமெல்லாம்
ஆசையோடுகேட் டவைகளறிந்தான் அரசன் மேலுமாங்கே
வீசுமொளியுடன் மறைவிளங்குமிரு வீரக்குமரர் கண்டான்
மாசிலாததவ முனிவரை 'யாரெ'ன மனங்குளிர்ந்து கேட்டான்
முகம்—மிகமலர்ந்து கேட்டான். 240

அமரரொளியுடன் வீரம்பொங்கப் பேரழகு கொண்டவிவர் யார்
குமரர்முனிவரே ! சொல்லுமெங்களது குலமது தவப்பயனே
உமதுசிடராய் மிதிலைவந்துளார் உள்ளங் கொள்ளைகொள்ளத்
தமதுவில்லுடன் இருவரானவிவர் தருமம் கொண்ட உருவோ ?
மிதிலையே—மயங்கக்கண்ட வரவோ ? 241

நாரணன்வலியொடு நளினத்தாமரை நயனங்கொண்ட விவர்கள்
போரணிகொண்டார் குஞ்சியழகுடன் புன்னகை வீசுகின்றார்
மாரர்இவர்வடிவு கண்டுமிதிலையுள மங்கையர் மகிழ்ந்திடவே
வாரணம்போல்கம் பீரநடையுடன் வந்துளதிங் கேனோ ?
மிதிலைநகர்—செய்த தவந்தானோ ? 242

மன்னவன் தயரதன் மக்களிருவரும் மகிழ்ந்தென் னுடன்வந்தே
உன்னதவீரம் காட்டித்தாடகையின் உயிரை யோட்டிவிட்டார்
பின்னவரென்தன் வேள்வியிலரக்கப் பேய்களோட்டி விட்டார்
நண்ணும்வழியிலிவ ரகலிகைசாபம் நலியச்செய்து வந்தார்
கௌதமர்க்—கின்பமின்று தந்தார். 243

மாசிலாதுநீ செய்யும்வேள்வியை மகிழ்ந்துகாண வந்தோம்
பேசுமாறிந்த வுலகுநீபெற்ற பெரியதான வில்லை
ஆசையோடிவர் காணவேண்டியா னழைத்துவந்த தென்றான்
கோசிகனிவையச் சதாநந்தர்மனங் குளிரச்சொல்லி நின்றான்
அவரின்பம்—வளரச்செய்து நின்றான். 244

தனதுதந்தைதாய் உளம்களித்திடத் தங்கிவந்த விவரை
மனதுகுளிரவச் சதாநந்தன்பல மங்களவாழ்த் திட்டான்
வினவிக்கோசிகனைத் தந்தைதாய்சேம விவரம்கேட்டுச் சொன்னான்
'உமதுசீடருக் கருமையானதொன் றுலகில் இல்லை' யென்றான்
'அவர்கள் பல—கலையினெல்லை' யென்றான். 245

குமராரிருவரும் குளிரக்கோதிலாக் குசிகமுனிவன் கதையைச்
சமதமங்களுடன் சாந்திகண்டவச் சதாநந்தன் சொல்வான்
இமயம்போன்றபல தவமிழைத்திவர் இன்றடைந்த பெருமை
உமதுமனத்தோர் கல்வியூட்டிப்பல உண்மை காட்டுமென்றார்
ராமனக்—கதையைக்கேட்டு நின்றார்.
ஸ்ரீராம ராம் ராம் 246



## அத்தியாயம்—23.

### ராகம்—தேவமனோஹரி.

[ கோசிகன் சரித்திரத்தைச் சதாநந்தர் கூறுவது ]

கேளாய் ராமா—கோசிகனுந்தன் குருகதையை—

கூடியுள்ளவரும் பாலரும் கேட்டிடக்
கோதமன் குமரன் கூறிடுவான்
நாடியுள்ளவிக் காதிமகன் பகழ்
கோடி கோடியதைக் கூறிடுவேன்—கேளாய். 247

ஆதியன் மகனக் குசனென்பான்—அவன்
நீதிகண்ட மகன் குசநாபன்
காதியுற்றனன் அவன் மகவாய்நீர்
காணுமிம்முனிவர் அவர்குமரர்—கேளாய் ராமா. 248

ஆயிரமாயிரம் வருடமிவர் - புவி
யாண்டு அறமதில் நிற்கையிலே
போயினன் ஓர்நாள் படையுடனே—இப்
புவியைச் சுற்றிவரப் புகழ்கொண்டே. 249

நாடுநகரம்பல கண்டதன் பின்னர்
கூடினனுங்கோர் குளிர்சோலை—இடை
ஈடிலாதபெரும் வேள்வி செய்து மறை
நாடிவாழ்முனிவர் நலம் கண்டான்
—கேளாய் ராமா. 250

யோகசித்திகள் பலபலவும்—ஒளி
யோங்கக் கற்றமா முனிவர்களும்
யாகமோடு பல விரதவேள்வி—பசி
தாகமின்றியே செய்திடுவார்—கேளாய் ராமா. 251

பிரமன்வாசமே கொண்டது போலப்
பிழையிலாத தவப் பூஞ்சோலை—யிடை
தருமம் ஒளிவிச வசிட்டமுனிவன்
தங்கிச் செய்தனன் தனியரசே—கேளாய் ராமா. 252

அவ்வசிட்டனைக் கோசிகன் கண்டே
அடிபணிந்திடவு மன்புடனே
செவ்விய முறையில் வரவுகூறி யவர்
சேமம் கேட்டிடுவனம் முனிவன்—கேளாய். 253

ஆசிரமமதின் வாழ்க்கை வழிகளைக்
கோசிகன் கேட்டான் குளிர்ந்திட்டான்
நேசமோடுமிவர் உரைக ளாடியபின்
பேசிடுவானப் பிரமரிஷி—கேளாய் ராமா. 254

கீர்த்தியோடு புவியாள்பவர் என்வழி
கேட்டு வந்துளீர் உமக்கின்றூர்
நேர்த்தியான பெரு விருந்தொன்றைப்—படை
சேர்ந்து களிக்கச் செய்திடுவேன். 255

வேண்டுவதிலையும் அன்பு மொழியதால்
வேண்டிய பெற்றேன் வேதியரே—என
மீண்டும் வசிட்டன் விருந்தொன்றைப்—புவி
யாண்டவன் படைக்கன் றளித்திடுவான். 256

அழைத்திடத் தெய்வப் பசுவதனை—விண்
ஆவது வந்து பணிந்ததுவே
இழைத்திடு பெருநல் விருந்தொன்றைப்—படை
இதயம் குளிர்ந்திட விக்கணமே. 257

பலசுவையன்னம் பாலொடு வெண்ணெய்
பாயச மறுசுவை யுணவுடனே
தலையிலை கனிகளும் தங்கவட்டில்களில்
தாம்பூலாதிகள் தோன்றினவே
—கேளாய் ராமா. 258

இனிப்புகள் எண்ணில தேன்சுவையூட்டும்
இனம்பல பலவாய் இருசுவைகூட்டும்
கனிகளெண்ணிலவும் காரம தோட்டும்
காரம்புளி சமையல் கலைகளைக்காட்டும்
—கேளாய் ராமா. 259



## அத்தியாயம்—24.

ராகம்—ஹிந்தோளம்.

[பசுவைப்பெறக் கோசிகன் பலவிதத்திலும் முயற்சித்துப் பலனடையாது பிரமபலம் நாடிச்செல்லல்]

குசிகனும் வந்துள படையினரும்—மனம்
குளிர்ந்து கொண்டனர் வேண்டுவன
பசுவினுற்றலைக் கண்ட மன்னவன்
பாங்குடனதைப் பெற வெண்ணினனே
—கேளாய் ராமா. 260

“ குவியல்குவியலாய்ப் பொன்னுடன் கோடி
குதிரை யானையொடு பசுக்கூட்டம்
புவியிலுமக்கே யானளிப் பேனிப்
புகழுள பசுவைத் தந்திடுவீர் ”— 261

என்று கேட்கவிக் காதிமகன்—அவர்
எனக் கதையளிக்கும் உரிமையிலை
ஒன்றுமப் பசுக்கிடிலை யெந்தன்
உயிராகுமதைப் பிரியேனே”
—(என்றுன் வசிட்டன்) 262

கோபமூண்டனன் குசிகன் படைபலம்
கொண்டு பசுவையாங் கிழுத்திடவும்
தாபமூண்ட பசு தவசியை “ ஏனிவர்
தன்னையிம் சிப்ப ” தென்றிடவும், 263

“ அரசன்படையதால் உனைக்கொள வின்றிவ்
ஆணவச் செயலே செய்வதெனத்
தரவிடை யப்பசு தாவி யோர்படை
தன்னுடல் கொண்டு படைத்ததுவே. 264

அப்படையதனை யழித்து விரமே
அரசன்படை காட்டக் கண்டபசு
பிப்பிலயவனக் காம்போசர்—எனும்
பிறிதொரு படைபிறப் பித்ததுவே. 265

அரசன் படையெலாம் அழிந்திடமேலும்
அகந்தை கொண்டவவன் குமரர்களும்
முரசொடு வசிட்ட முனியைத் தாக்கிடவும்
மூச்சுவிட் டவரை முடித்திட்டான். 266

என்றும் கேட்டிடா வசையுடன் கோசிகன்
ஏக்கம் கொண்டனன் அத்தினமே
சென்று மிமயமோர் சீரியதவமே
சிவன்மனம் குளிரச் செய்திடுவான். 267

மஹாதேவனும் மனதுகுளிர்ந்தம்
மாதவன் முன்பே தோன்றிடவும்
அகாத மாயிம் மூவுலகுளவில்
அத்திரவேத மறிந்தனனே. 268

அகந்தை யுற்றுமிவன் வசிட்டமாமுனி
ஆச்ரமமுளவச் சோலையிடை
வெகுண்டு வந்துபல மந்திரவாளிகள்
வெந்திட வன்று விடுத்தனனே. 269

குசிகன் போக்கதைக் கண்டு வசிட்டன்
கோபங் கொண்டனன் அத்தினமே
வசையிலாப்பிரம தண்ட மெதிரிலே
வலியிழந்ததவ் வாளிகளே. 270

ஒன்றல பலபல தீயுமிழ்ந்தாங்கே
ஓடிவந்த பல வாளிகளும்
அன்று வலியிழந் தடிபணிந்ததவ்
வந்தணன் கையுள தண்டமதால். 271

'நில்' லெனப் பிரமன் வாளியையரசன்
நேரில் விட்டிடவும் அதனைமுனி
சொல்லொணாததன் பிரமவலி கூட்டிச்
சோபை காட்டிடவும் சோர்ந்ததுவே. 272

தண்டம் கைக்கொண்டு தந்தைதேசுடன்
தனிவலியுள பல வத்திரமும்
உண்டது கண்டிவ் வுலகமூன்றுமவ்
வுத்தமன் புகழைக் கூவியதே. 273

வலியிழந்தவக் கோசிகன் 'சீசீ'
வசையதாகுமிவ் வரசபலம்
பொலிவுள உண்மைப் பிரமபலமதே
போற்றற் குரியதெனப் போய்விட்டான். 274

## அத்தியாயம்—25.

### ராகம்—பைரவி.

[குசிகன் பிரமரிஷிப் பட்டம் வேண்டித் தவமிருக்க, பிரமன் தோன்றி ராசரிஷிப்பட்ட மளித்தலும் குசிகன் மேலும் தவமிருத்தலும்]

உற்ற அவமானம் தன்னைக் காதிமகன்
உன்னியுன்னி மனம் நொந்துமன்றே
நற்றவம் செய்தே பிரமரிஷிப் பட்டம்
நாடமனத்துத் துணிவு கொண்டான். 275

பத்துநூறாண்டுகள் செய்த தவத்தினால்
பதும மலரண்ணல் வந்துநின்றே
"மெத்தவுலகம் உன்வேள்விக் கின்றீந்தனம்
மேவிடும் ராஜரிஷிநீ" யென்றான். 276

"பிரம முனிப்பட்டம் பெற்றிட விந்தவம்
பிழையின்றி செய்த தறிந்துமிவர்
வரமது விந்தை! யரசமுனியென்று
வாழ்த்துதலெ" ன்று மனமுடைந்தான். 277

மேவும் தருமத்தி லூற்றம் கொண்டேமனம்
மெத்தவும் சாந்தியடைந்து நின்றான்
மூவுலகும்தவத் தியதனாற் புகை
மூண்டிடவேள்வி முனைந்து செய்தான். 278



## அத்தியாயம்—26

### ராகம்—மனோஹரி.

**[திரிசங்கு கதை.]**

அன்று தருமமதிலே யாற்றல்மிகு
அரசன் திரிசங்கு ஆண்டுவந்தான் - (புவி)
ஆண்டு வந்தான்
என்றுமுண்மை பேசும் — நல்லறம்
ஏற்றவனோர்நாள் எண்ணங் கொண்டான். 279

உடலுடன் வேள்வியினால் — விண்ணை
அடைந்திடவன்றே வாசை கொண்டான்
"வேள்வி செய்வி" ரென்றே — வசிட்டன்
தாள் பணிந்திடவும் தவசியதை 280

"தருமமல்ல" வென்றான்; — அரசன்
கருமமதனையே கருத்துட் கொண்டான்
குருவசிட்டன் குமரர் — நூற்றுவர்
பெருமைகூட்டும் தவப் பேறுடையார். 281

அவரையண்டிச் சொல்வான் — "ஸ்வாமி!
தவவசிட்டரெனைத் தள்ளி விட்டார்
இவ்வுடலுடனே வான் — ஏகிடச்
செவ்விய யாகம் செயக்கேட்டேன் 282

இயலாதென்று விட்டார் — நானும்
அயலானிலையுமை அண்டிவரும்
அரசன் காப்பீர்" என்றான் — குமரர்
"விரசமானதும் வேண்டுதல் — எம் 283

தந்தை சொல்லி விட்டால் — அதனை
நிந்தனையாம் பிறர் நினைத்தலெ" ன்றார்
மனமது நொந்தரசன் — உள்ளம்
சினமது சிறிதே கொண்டு சொல்வான். 284

"ஆயின் என் மனங்கோரும் — வேள்விசெயப்
போயொரு பெரியாரைப் போற்றிடுவேன்"
என்றனன் முனிவரரும் வெகுண்டார்
"நன்றியற்ற நீ நாளை முன்னர் 285

எண்டிசை யேசிடவும் — உனையொரு
சண்டாள உடல் சாரு" மென்றார்
மனமது நொந்தரசன் — மறுதினம்
தனையவ் வுருவம் தழுவநின்றான். 286

துயர் கொண்டனனெனினும் — முயன்றே
உயர்தவம் நின்றிடும்உன் — குருவை
அண்டிப்பாதம் வீழ்ந்தான் — அவன்மனம்
கொண்டனன் அரசன் குறைதீர்க்க. 287

வேள்வியொன்றை யன்றே — அரசன்
நீள்வான் உடலுடன் நின்றடையச்
செய்யும் செய்தி விட்டான்—தவசியர்
வையமுள்ளபலர் "வருக" வென்றான். 288

கூட்டம் முனிவர்கூட — அன்றே
கேட்டுமஹோதயன் நூற்றுவராம்
வசிட்டகுமரர்களும் — வேள்வியை
அசட்டை செய்ததனை—அவமதித்தார் (எனப்) 289

பொங்கும் கோபம் கொண்டான் — கௌசிகன்
மங்கித் தவமவர்கள் மாண்டுபின்னர்
முஷ்டிகராய்ப் புவியில் — பிறவிபலக்
கஷ்டமுற்றுழலக் கடவி ரென்றான்
சாபம் பலித்த தன்றே—ஜெய ராம ராம ராமா. 290

## அத்தியாயம்—27.

**ராகம்—ஸாரங்கா.**

**[திரிசங்கு உடலுடன் விண் செல்லாதது கண்டு குசிகன் தனிவிண்படைத்தல்]**

விசுவாமித்திரன் மனமறிந்தாங்கே
விரைந்து கூடியுள தவசியரும்
பிசகிடாதுமறை வேள்விமுறைகளைப்
பின்பற்றிட மனம் கொண்டனரே. 291

முனியும் வேள்வியைத் தொடங்கித்
தேவர்களை முறையுடனழைத்தே அவியிடவும்
இணங்கித் தேவர்கள் வரவிலைகண்டான்
இதயம் பொங்கிமனம் வெகுண்டிடுவான். 292

அவியகப்பைதனை வானுயர்த்தியுள
அமரர்கேட்டிடவும் அன்றுரைப்பான்
புவியை விட்டுவான் உடலுடனரசன்
போகச் செய்வனென் தவமதனுல். 293

எனது வேள்விபலன் யாவும் தந்துளேன்
ஏறஅரசன் விண் உடலுடனே
எனவும் கோசிகன் உலகம்காண வன்
றேறினனரசன் விண்ணுலகம். 294

வானவரொடு திரிசங்குமன்னவன்
வந்துளததனை இந்திரனும்
காணக் கோபமொடு கால்தலைக் கீழாய்க்
கவிழப் பூவுலகு தள்ளினனே. 295

உருண்டுகீழ் விழும் திரிசங்குமனம்
உலரவாய்விடுத் தலறிடவும்
இருண்டு உலகெலாம் எரியக்கோசிகன்
இமையவரஞ்சக் கூவிடுவான். 296

"நில்லு, நில்லரச! வானிடை இன்றோர்
நிகழ்த்துவன் ஓர்புது படைப்" பென்றான்
எல்லையற்றதன் வேள்விபலமெலாம் ஏவி
வானுலகு படைத்திடுவான். 297

வானில் தெற்குவழி சப்த ரிஷிகணம்
வரவென் றனனவை தோன்றிடவும்
ஊனமற்றதொரு இந்திரனெடுபுது உலகம்
திட்டமன முன்னிடுவான். 298

தேவர்களொடுபல ரிஷிகள்கூடியே
தேற்றிமுனிவனைப் போற்றினர் பின்
ஆவதில்லை குரு சாபஉடலுடன்
அரசன் விண்செலல் என்றனரே. 299

சொன்னவாறுவிவ் வரசன்காப்பதென்
சொல்லதையின்றே நான்முடிப்பன்
மின்னும் வானிலவன் தாரகைசூழவும்
மிளிருவனிவனெங் நாளுமென்றான். 300

வந்தவேதியரும் அமரருமவனை
வாழ்த்திச்செல்லவும் மேற்றிசைக்கே
குந்தகமுற்றதன் வேள்விமேலும் செயக்
கோசிகன் செல்வான் கோகரணம். 301

---

## அத்தியாயம்—28.

### ராகம்—சக்ரவாகம்.

### [சுனச்சேபன் கதை]

கூடியுள்ள பல சிடர்கள்சூழக் கோசிகன் சென்றன்றே
நாடிப்புட்கரம் கடுமையான தவம் நண்ணிச் செய்யலானான். 302

அன்றயோத்தியை யாண்டமன்னவன் அம்பரீஷ னென்பான்
நின்றுவேள்விசெய பசுவையிந்திரன் நீக்கிக்கொண்டு சென்றான். 303

பசுதவத்திடை யிழந்து விட்டபெரும் பாபமதனைப் போக்க
இசையும் ஓர் நரன் தேடிவந்திடில் ஈடுசெய்யு மென்றான்
அரசன்—நரனைத் தேடிச் சென்றான். 304

ஆவதாயிரம் ஆயிரம் தருவன்அதற்கோர் நரப்பசுவே
தேவையென்று பல நகரம் மன்னவன் தேடிச்செல்ல லானான். 305

எங்குந்தேடியும் நரபலியொன்றை யெய்திடாம லரசன்
தங்கி பிருகுதுங் தம்மெனும் மலையிடைத் தவசிரிசிகன் கண்டான்
அவன்—மூன்று மகவு கொண்டான். 306

இன்னல் கூறியோர் மகவையரசனும் இரக்கமுனிவ னந்நாள்
முன்னவன் எந்தன் உயிரவனையிதல் முடியாதென்று சொன்னான். 307

அன்னை வந்துமோர் ஆயிரம்வரினும் அருமையான வெந்தன்
பின்னவன் கடைசி மகன் சுனகனைப் பிரிவதில்லை யென்றாள்
அவனைத்—தருவதில்லை யென்றாள். 308

இடைபிறந்தவச் சுனச்சேபனும் இதனைக்கேட்டுமுன் வந்(து)
அடையத் தந்தையவ்வாயிரம் பசுவாய் அரசனோடு சென்றான். 309

தேரில் மன்னனொடு சுனச்சேபனும் தெரியவன்று பகலே
நேரில் கோசிகன் தவமுள புட்கர நேர்த்திச்சோலை வந்தான். 310

ஆங்குக் கோசிகன் ஆழ்ந்ததவமிடை அண்டிப்பாதம் வீழ்ந்தே
தீங்கு நேர்ந்ததைச் சுனச்சேபனும் தெரியக் கூறலானான். 311

"தாயொடு தந்தை குருமுறை யெல்லாம் தவசி! நீரெனக்காம்
தூயதான உம் தாள்விழுந்த வென் துயரம் நீக்குவீரே" 312

அடிபணிந்தவக் குமரனுக் குற்றதொ ரல்லல்கேட்டு முனிவன்
உடனிருந்த தன் தனயர் நால்வரையு முற்று நோக்கிச் சொல்வான் 313

அறமதாகுமிச் சிறுவன் வாழ்வு கொளல் அவியைக்காக்க நீங்கள்
சிரமதேற்றுமென் ஏவலென்றின்று செல்ல வேணு மென்றான். 314

குசிக மக்களிதைக் கேட்டுமறுத்தே கூடிநகைத்திட்டே
"வசையதாகுமும் மக்கள் பிறர்வாழ வதைப்பதெ"ன்று சொன்னார். 315

கோபமூண்டனன் மக்கள் தன்னலம் குசிகன் கண்டு விம்மிச்
சாபமீந்தனன் ஆயிரம் வருடம் சாவுகண்டு புவியில் 316

முட்டிகராய் வாசிட்டகுமரர்கள் முன்புபட்டதே போல்
மட்டிலாததுயர் பட்டு வீழ்விரென மாமுனிவன் சொன்னான். 317

சுனச்சேபனுக் கன்றிரு விஞ்சைகள் சுகமளிக்கச் சொல்வான்
கனல்வேள்வியில் கட்டுமுனையிவை காக்குமென்று சொன்னான்
வேள்வியும்—ஆக்குமென்று சொன்னான். 318

அம்பரீஷனொடு சென்று வேள்வியில் அல்லல்கண்ட வேளை
நம்பி விஞ்சைகள் ஓதிடச்சிறுவன் நாரண னிந்திரனும் 319

வந்துசிறுவனைக் காத்து வாழ்த்திப்பின் வழங்கு மவிசுகொண்டார்
அந்த வேள்வியைக் காத்துச் சென்றனன் அழக! கேளுகதையை
உன்குரு—பிழையிலாத கதையை. 320



## அத்தியாயம்—29.

ராகம்—விநோதினி.

[மேனகையால் குசிகன் தவங்குன்றலும், மீண்டும் பெருந்தவமியற்றிப் பிரமரிஷிப் பட்டம் பெறலும்]

புட்கரத்திலோ ராயிர வருடம் புரிந்ததவப் பயனால்
உட்கருத்துடன் பிரமன் தோன்றிநீ உற்ற விருடியென்றான்
வெட்கமுற்றுமுனி மேலும் தவமதே வேண்டிச்செய்ய லானான்
புட்கள் பேசிமான் துள்ளும் சூழலில் புதுமைகண்டு நின்றான்
காமனிவர்—கதியைக் கண்டுவென்றான். 321

தேவகன்னிகை மேனகை பொழிலைத் தேடிவருதல் கண்டான்
ஆவிசோர அவ் வனங்கனணையால் அவளைக் காதல் செய்தான்
மேவிவேண்ட சுகம் கோசிகனும்மம் மேனகையை யந்நாள்
தேவியாய் அவள் வாழ்க்கையி லின்பத்தேன் பொழிந்து நின்றாள்
முனிவனும்—தவமழிந்து நின்றான். 322

ஆண்டு பத்தாங்குச் செல்லக்கோசிகன் அமரர் சூழ்ச்சியென்றே
மாண்ட தவமதை யுன்னிக் கொண்டனன் மட்டிலாத லச்சை
வேண்டிநின்ற அம்மேனகையாள் படும் வேதனையோட்டிப்பின்
மீண்டுமோர் தவம் வடதிசை சென்றே மேவிச் செய்யலானான். 323

அமரர் வேண்டிடப் பிரமன் வந்துமுனி யறியக் கூறலானான்
உமதுதவமதால் "மகரிஷியாய்" நீர் உயர்வு பெற்றிரென்றான்
சமதமங்களுடன் இந்திரியங்களைச் செயித்த முனிவ னந்நாள்
அமைதியூட்டுமப் பிரமரிஷிப்பேறு அருளவேண்டு மென்றான்
தேவர்கள்—மருளவேள்வி நின்றான். 324

நீரில் கானலில் கடுமையானதவம் நின்று முனிவன் செய்ய
நாரியரம்பையோ டிந்திரனதனை நலிக்க எண்ணங் கொண்டான்
கோரியபடியவள் செய்ய வஞ்சியே கூசிநிற்க அமரன்
காரியமதிலவள் வெற்றிகாணத் தான்கலந்து கொண்டுவந்தான்
மாரன்—மலர்ந்து தொண்டுசெய்தான். 325

வந்ததறிந்தே முனிவன் காபமது வளரச்சாபமிட்டான்
சிந்தை என்தவம் செய்யவந்தநீ நீண்டகாலம் கல்லாய்
நொந்து விழ்வையென இந்திரனதனை நோக்கியோடி விட்டான்
முந்துதவமும் தன் கோபத்தால் முனிவன் முடியக்கண்டு நின்றான்
தவம்—ஒடியக்கண்டு நின்றான். 326

ஒபபுயர்வில்லாத் தவமதைக் கீழ்திசை ஓங்கநின்று செய்தான்
தப்பிலாதவகை மனதைக்கட்டிப்பெருந் தவமியற்ற லானுன்
எப்புவியுங்கண் டஞ்சுமாறுதி எரியவேள்வி நின்ருன்
அப்பெருந்தவமோ ராயிரமாண்டுகள் அன்னமின்றிச் செய்தான்
அதிலோர்—இன்னலின்றிச் செய்தான். 327

ஆயிரமாண்டுகள் பிறகோர்நாள்முனி அன்னம் கொள்ள வெண்ணி
போயிடவாங்கே இந்திரனுந்தணப் பொலிவுகொண்டு வந்தான்
வாயுணவதனைத் தன்பசிக்கென்று "வழங்க"வேணு மென்ருன்
மாயமிதென்றே மனங்களித்துஊண் மாதவன் ஈந்திட்டான்
பின்னுமா—தவமதி லாழ்ந்திட்டான். 328

மூச்சடக்கியோர் மோனமானதவம் முனைந்துசெய்ய லானுன்
காட்சியாகவோர் வேள்விப்புகையவன் கபாலம்விட் டமரர்
சாட்சிநிற்கவிம் மூவுலகந்தனைச் சாம்பராக்கக் கண்டே
பேச்சொழிந்துநின் றமரர்பிரமனைப் பெரிதும் வேண்டலானுர்
பிரமன்—முனியை வேண்டலானுன். 329

அமரரோடுவான் பிரமன் தோன்றியே அன்றுபோற்றிச் சொல்வான்
"உமதுவேள்வியால் பிரமரிஷிபதம் உம்மதாயிற்" றென்ருன்
அமைதியோடுமிம் முனிவன்மறையாதி அந்தமற்ற ப்ரணவம்
தமதுசெல்வமாய் வசிட்டனப்பெயர் தருதல்வேணு மென்ருன். 330

"பிரமமுனிவர் நீர்" எனவசிட்டனும் பிழையிலாத மொழிகள்
தரவும் கோசிகன் அவரதுபாதம் தண்டனிட்டு நின்ருன்
அறம் வளர்த்திடும் அமரர் கூட்டமதை யன்று பணிந்திட்டான்
சிரமதேற்றவர் தந்த புகழினுல் சிந்தை குளிர்ந்திட்டான்
கௌசிகன்—புகழில் வளர்ந்திட்டான். 331

---

## அத்தியாயம்—30.

ராகம்—பூர்ணசந்திரிகா.

[சனகன் வரவேற்று வில்லின் விவரங் கூறலும், ராமன் அதை யெடுத்து நாணேற்றலும்]

இக்கதை கேட்டே சனகமாமுனிவ னிருகரங்கள் குவித்தான்
தக்கவாறு புகழ் வரவுசொல்லியவன் தனதுமெய்ம்மறந்தான்
மிக்கபாக்கியம் எந்தன் வேள்வியொடு மிதிலை செய்ததென்ருன்
ஒக்கக்கேட்டவிரு பாலருமிதனுல் உவகைகொண்டு நின்ருர். 332

மாலைவந்திடவும் மன்ன னவரிடம் மகிழ்ந்து விடைகொண்டான்
காலைமறுதினம் வருவதாக விடை கண்டுகேட்க லானுன்
மேலையுள்ளபணி கண்டு கோசிகன் மெச்சிவிடை தந்தான்
தாளைப்பணிந்தவர் போய்விடமுனிவன் தங்கினனங்கிரவே. 333

விடியுமுன்னர்தன் விதிகள் செய்தரசன்
கடிது சென்றுமுனி கரியசெம்மலுள
விடுதி சேர்ந்துமறை விதிகள்காட்டுமக்
நெடியபூசைபல நிகழ்த்திச் சொல்லுவான். 334

வில்லின் விவரமதை சனகனவர்க்கே விரித்துரைக்க லானுன்
அல்லலுற்றிடத் தட்சன்முன் வேள்வி யவியிடாது சிவனைக்
கல்லிச் செய்யவும் தேவர்கள் சிரமே களைவனென்று சிவனிவ்
வில்லெடுத்தனன் அபயம்வேண்டியவர் வீழ்ந்து பாதம் முய்ந்தார். 335

அந்தநாளிலிவ் வில்லையமரரே அளிக்கக் கொண்டு நின்றுன்
எந்தன் தாதையாம் தேவராதனவன் எங்கும் ஓங்குபுகழான்
வந்தமுன்னவர் வழிபாடுகளுடன் வைத்தவில் லிதனை நான்
இந்த நாளிலோர் வீரசுல்கமாய் இசையக் கூட்டியுள்ளேன். 336

யாக பூமியை யுழுதிடவதனுள் யாரும்கண்டு மகிழத்
தோகைபெண்ணுருக்கொண்டு ஸ்ரீயவள் தோன்ற வெந்தன்பெண்ணுய்
போகமோடுபெயர் சிதையென்று நான்புனைந்து போற்றிவந்தேன்
வேகமாகக் கலியாணம் செய்துதர வேண்டி வேந்தர் வந்தார். 337

நாணையேற்றி இவ் வில்லொடித்திடில் நங்கை யிவதென்றேர்
ஆணைகொண்டனன் அதனைச் செய்யவோ ரரசன் காணவில்லை
வீணிலெந்தனைத் துன்புறுத்தினர் வேண்டிடாது பகைத்தார்
காணுமமரர்தரு சேனைகொண்டவரைக் கலங்கச்செய்து நின்றேன்
பலவேள்வி—செய்து வென்றேன். 338

கேட்டகோசிகன் இராமனுக்கு வில் காட்டவேணு மென்றுன்
நாட்டம் கேட்டரசன் வில்லையாங்குடன் நண்ணுமாறு செய்தான்
ஊட்டமான வையாயிர மாட்கள் உந்தித் தள்ளிவரவும்
பூட்டிச் சகடமோர் எட்டுடன் எஃகுப் பெட்டி வந்ததாங்கே. 339

இறக்கச் சந்தனம் மலரோடுபூசை நிகழும் வில்லைக் கண்டான்
பிறக்கவீரமெவ் வசுரரமரரும் பிடித்திடாத வில்லைச்
சிறக்கத் தருமமே ராமனுக்குமுனி சிரித்துக் காட்டிச்சொல்வான்
“அரக்கர் மாய்த்தஸ்ரீ ராமகுழந்தாய்! அழகுவில்லைப்பாராய்” 340

வணங்கி ராகவன் எழுந்து வில்லிடம் வாரணமெனச் சென்றே
அணங்கு சீதையின் அலங்கலோவென அலுப்பிலாமலதனைச்
சனங்கள் காணவே கையெடுத்தனன் சருகு போன்று பின்னர்
இணங்கி நாணதில் பூட்டிவளைத்தா னிற்று வீழ்ந்த தன்றே
சராசர—மற்று வீழ்வதென்றே. 341

— • —

## அத்தியாயம்—31.

ராகம்—சுத்ததன்யாசி.

[தயரதனுக்கு வில்லொடித்த செய்தியனுப்பி மணவேற்பாடுகள் செய்தல்]

வீரம் கண்டு மனம் விம்மிக்களித்திட விதேஹமன்னவன் பின்
காரியமெண்ணிக் கோசிகனிடமதைக் கலந்து கேட்கலானன்
கோரிசிதையின் மணமிராமனுடன் கொள்ள விடையை யன்றே
நேரிலாட்களை அயோத்திசெலவங் நேரமேவி விட்டான். 342

ஆட்கள் புறப்பட்டே—அயோத்தியை
நாட்கள் மூன்றில் நண்ணித்—தயரதன்
தாட்கள் பணிந்தன்றே—பின்னுமவன்
கேட்க உரைத்திடுவார்—ஸ்ரீராம ராம் ராம். 343

வீரம் காட்டி ஸ்ரீராகவனுங்கே வில்விறுத்த விதமும்
தாரமாகவச் சீதையை யவன் பெறத் தகுதியுற்ற விதமும்
நேரிலிவைகளை மன்னனுக்கவர் நிகழ்ந்தவாறு சொன்னர்
கூறியாவையும் " உம்மைச் சுற்றமுடன் கூட்டிவரச்சொன்னர்
சுபமதை—நாட்டி வரச்சொன்னர்". 344

தயரதனதனைக் கேட்டுமகிழ்ந்தே தவசியர் விடைகொண்டான்
உயர்விதென்றனர் அந்தப்புரமதில் உத்தமிகள் கேட்டார்
அயர்விலாது சதுரங்க சேனையுட னன்று புறப்பட்டார்
உயர்வு பெற்றவம் மிதிலைநாட்டவர்க் குவகையூட்ட வந்தார். 345

வரவுகேட்டுமச் சனகன் நாட்டிலுள வழிகள் சிங்கரித்தான்
பெருமகிழ்ச்சியுட னெதிர்கொண் டவரைப் பேருவகை கொண்டான்
அறம் வளர்க்குமவ் வசிட்டனுதியர்க் கதிதி பூசை செய்தான்
தருமமோங்கவரும் தயரதனைப்பார்த் தன்று மகிழ்வுற்றான். 346

வேள்வி முடியுமம் மறுதினம்காலே வேதம்காட்டும் வழியில்
கேள்வன் ராமன்மணம் முடிக்கத் தயரதனைக் கேட்டுவிடை பெற்றான்
தாள்பணிந்துமத் தவசியரெல்லாம் தங்கவசதி செய்தான்
நீள்புகழரசன் தம்பி குசத்வசனை நின்று வரவழைத்தான். 347

எங்கள் வீட்டுமணம் எங்கள்வீட்டுமணமென்று மிதிலை மக்கள்
பொங்கியாடியம் மங்கள ராமனைப் போற்றிவரவு சொன்னார்
"நங்கை நம் சீதை நயனமொன்றினெழில் நாயகரிவராவர்
தங்குமிவனைப் பெற ஆயிரம் வில்லிவர் தகைக்கவேணுமென்பார்
கூட்டிப்பின்—நகைக்க வேணுமென்பார். 3:8

எல்லையற்றவம் மிதிலைஎங்குமிடை யின்றி முத்து மணியால்
வல்லி சீதை மணம் காண மூவுலகும் வந்து பந்தல் வேய்ந்தார்
சொல்லிலடங்காச் சூரியஒளிதரும் சோதி சூழ வைத்தார்
பல்லியங்களும் பாடியாடப்பல பாணர் கூடிவிட்டார். 349

உலகிலுள்ளபல அரசரோடுதவம் உற்ற முனிவர் கூட்டம்
கலகலப்புடன் கூடிமணமதில் கலந்து வேலைசெய்தார்
தலமதற்குப்பின் மங்கல முழங்கிடத்தயரதன் குமரரையும்
விலைமதிப்பிலாப் பரிசுகளுடனே விரைந்து கூட்டிவந்தார்
திகழும்—ரதமதோட்டிவந்தார். 350

---

## அத்தியாயம்—32.

**ராகம்—மணிரங்கு.**

**[ ஸீதா கல்யாணம் ]**

கூடியுள்ளவர் கேட்க வசிட்டன் குலவரலாற்றதனை
நாடிப் பிரமன் தரும் மரீசிகாச்யபர் நல்கு சூரியன் பின்
தேடியுலகுதர மனுவவர்பிள்ளை திகழுமிக்ஷ்வாகு
பாடியுலகேத்தும் நகுஷயயாதியப் பார்த்திபர்குலம் சொன்னார். 351

அசன் மகனுமித் தயரதனுக்கே அழகுராம னுற்றான்
பிசகிலாதவிவ் வமிசப்பேற்றதனைப் பெரிதுவந்து கேட்டார்
விசையுடனேயச் சனகர் குலமதை விளக்கிக்கூறலானார்
வசையிலாத நிமி, மதி, உதாவஸுடன், விபுதர், பின்னுளாரும் 352

மகரோமன்மகன் ஸ்வர்ணரோம னவன் மகனுப்ர் சனகருடன்
சகஉதிரனுக புகழ்குசத்துவசன் சந்ததிகள் என்ருன்
அகமகிழ்ந்துமே லாங்குளர் அறிந்திட அரசன் சீதையுடனே
தகவுடனூர்மிளே தனதுபெண்ணேயும் தாரைவார்ப்பனென்ருன்
இலக்குவ—னவளே யேற்பனென்ருர். 353

குசிகனுள்ளமே குளிரவிவ்விரு குலமதோங்க வன்றே
பிசகிலாதவெழில் மாண்டவியுமுடன் பிறந்தச்ருதகீர்த்தியும்
குசத்துவசன்மகளவ் விருவரைப் பரதன் குணமிகு சத்ருக்னன்
இசைந்துபெற்று உலகாளவேண்டியன் றிணேக்கவேணுமென்ருர்
முனிவரதைப்—பணிக்கவேணு மென்ருர். 354

பங்குலியங்நாள் உத்தரமுதிக்கப் பார்மகிழ்ந்த தன்றே
அங்குத்தயரதன் மக்கள்நால்வரும் அந்தணர் சொல்வதுபோல்
தங்கிவிரதமொடு பார்களிக்க கோ தானம் பலவும் செய்தார்
பொங்குமுவகையுடன் கூட்டமாக மணம்பொலியும் பந்தல் வந்தார்
எழில்—ஒளியும் தந்துநின்ருர். 355

கன்னியர் நால்வரும் கலனுடை கண்டோர் கண்கள் கூசவந்தார்
மின்னலுற்றதென வேதமழையிடை மிளிர்ந்த தங்கியாங்கே
சொன்னகும்பமொடு பாலிகை பொரியும் சோபனுட்சதைகள்
வன்னதீபங்கள் கந்தம் தூபம்மிக வளரவெங்கும் கண்டார்
தேவரும்—ஓகை யன்று கொண்டார். 356

மலரைவிட்டன்று மனிதர்காணவரும் மஹாலக்ஷ்மியே போல்
விலகிநின்றவச் சீதை கரமதனே வேந்தன் காட்டிச் சொல்வான்
"உலகிலுன்னுடன் தருமம் காக்கும்நிழல்உத்தமி" இவளென்ருன்
அலகிலாத வெழில் ராம! கைப்பற்றி அடைவையென்று சொன்னுன்
தேவர்—மலர் விடா துதிர்த்தார். 357

"அவ்விதமாங்கே பின்னவனூர்மிளே அங்கை கொள்க" வென்ருன்
செவ்வியகரம் மாண்டவியைப் பரதனும் செழிக்கப்பற்றி நின்ருன்
எவ்வுலகும்புகழ் ச்ருதகீர்த்திகரம் எழில்மிகு சத்ருக்னன்
அவ்விதமேகொள உலகமுய்ந்ததென் றமரர் ஆடிநின்ருர்
எழிலுள—குமரர் கூடிநின்ருர். 358



